Bulletin of the Tamil Department, No. 4

# KAYĀTARAM

EDITED BY

RAO SAHIB S. VAIYAPURI PILLAI, B.A., B.L.,
*Reader in Tamil.*



UNIVERSITY OF MADRAS

1939

*Price Re. 1.*

# கயாதரம்

சென்னை ஸர்வகலாசாலை
தமிழாராய்ச்சித் துறைத் தலைவர்
ராவ் ஸாஹிப் S. வையாபுரிப்பிள்ளை, B.A., B.L.,
பதிப்பித்தது

சென்னை ஸர்வகலாசாலை
சென்னை
1939

விலை ரூபா 1/-

# உள்ளுறை

# FOREWORD

KAYĀTARAM is one of the important metrical lexicons in Tamil. It comprises 566 stanzas divided into 11 sections, the first ten sections dealing with synonyms and the last one with homonyms. The verses are arranged in *antāti-t-toḍai,* a mnemonic device. In the treatment of synonyms, the work closely follows Divākaram, the earliest of Tamil nighaṇṭus.

Its author, Kayātarar, was a Brahmin of the Kāśyapa Gōtra and belonged to Tēvai or Rāmēśwaram. He was a Śaivaite by religion and was well versed both in Sanskrit and Tamil literature. He composed a Kōvai in praise of the Lord of Rāmēśwaram. This is all the information we gather from the prefatory verses and the final verses of the several sections of the work.

A reference to this work occurs in the commentary of *Māṟanalaṅkāram* at p. 22. This commentary was written by Kāri Ratnakkavirāyar of Ten-tiruppērai, who lived in the latter half of the 16th century. We find in Kayātaram itself (St. 412) a reference to Yāpparuṅkalakkārikai, which may be ascribed to the beginning of the 11th century. (Compare also Nighaṇṭu Cūḍāmaṇi, xi, 23). Between the limits fixed by these two references we have to find a date for Kayātaram. From a consideration of the development of lexicographical method in Tamil, we may assign this work to the middle of the 15th century. This accords well with its mention just before Nighaṇṭu Cūḍāmaṇi in the commentary of Māṟanalaṅkāram.

Āṇḍi-p-pulavar mentions this work in his Āciriyanighaṇṭu. It is also mentioned in a stanza of Arumporuḷviḷakka Nighaṇṭu, written in Śaka, 1685, *i.e.,* 1763 A.D. The author is referred to as 'Kayātarar of refined diction' (செஞ்சொற்கயாதரர்).

The work is important in many ways. It throws considerable light on the text of Divākaram, which, as already noted, it closely follows. Though Divākaram is the earliest of the extant nighaṇṭus and is frequently cited by commentators on the Tamil classics, it has not yet been critically treated and edited. For such treatment, the present work is sure to be of immense use. Moreover, it helps us to correct the forms and the meanings of terms, which, through scribal errors, have fallen into hopeless corruption. To mention only one instance, we find pārinmicaiyavan (பாரின்மிசையவன்) as one of the names of Buddha. This term is a puzzle.

The correct form, as given in Kayātaram (St. 14), is pāramitaiyavan (பாரமிதையவன்). Lastly, the work is a contemporary guide to the vocabulary of the 15th and 16th centuries.

I have been able to obtain three manuscripts of this important work. Of these, only one is complete, containing all the 11 sections. It belongs to the manuscript-collection of the late Mr. T. T. Kanakasundaram Pillai and was kindly placed at my disposal by his son, Sri Rājēśwaran, B.A. The other two manuscripts contain only the first ten sections with lacunae, the biggest (from St. 84 to 151) being common to both. One of the Mss. belongs to Dr. V. Swaminatha Aiyar and the other to the Tamil Sangam Library, Madura. The colophon at the end of Dr. V. Swaminatha Aiyar's manuscript makes us suspect that the original from which it was copied consisted of only 10 sections. But the eleventh section on homonyms is doubtless a genuine part of Kayātaram. The author of Arumporuḷ-viḷakka Nighaṇṭu bears testimony to this (St. 6).

A short account of Kayātaram was first given, thirty-two years ago, by Sri Rao Sahib M. Raghava Aiyangar in Sen Tamil (Vol. V, 21). But the work has remained unpublished till now.

I am happy to acknowledge my indebtedness to the kind friends who generously gave me loans of the manuscripts mentioned above. Vidwān N. K. Srinivāsan, B.A., assisted me in revising the proofs for the press and Messrs. T. K. Rāmānuja Aiyangār and S. Nallasivan Pillai, both of Madura Tamil Sangam, compared the proof with the manuscript available at the Śangam. I am very grateful to these learned scholars for their assistance.

The G. S. Press, well-known for the quality of their work, deserve thanks for the excellent format and the speedy publication of the work.

University of Madras,
Madras, 12th Sept., 1939.

S. VAIYAPURI PILLAI.

# முன்னுரை

கயாகரம் என்ற பெயரால் இந்நூலைப்பற்றிப் பலரும் கேள்வியுற்றிருக்கக்கூடும். ஸ்ரீ வேதகிரி முதலியார் தாம் வெளியிட்ட இலக்கியக் களஞ்சியத்திலே 'கயாகர நிகண்டு' என்ற நூலொன்றனைக் காட்டியிருக்கின்றனர்[1]. செந்தமிழ்ப் பத்திரிகை 5-ம் தொகுதியில் (பக். 121) 'கயாகர நிகண்டு' என்பதுபற்றி ஒரு குறிப்பு வெளிவந்துள்ளது. அரும்பொருள் விளக்க நிகண்டின் பாயிரத்திலே (செய். 6) 'செஞ்சொற் கயாகர னிவராற் சொற்ற பாவியல் நூல்' என ஆசிரியர் பெயர் வருகின்றது.

நூற் பெயர்.

ஆண்டிப் புலவர் இயற்றிய ஆசிரியநிகண்டுப் பதிப்பில்[2]

'முந்துள திவாகரம் பிங்கல நிகண்டு சீர்
முந்து காங் கயனுரிச் சொல்
முறைபெறு கயாகரம் பகரு மகராதியிவை
முற்று மொன்ருய்த் திரட்டி'

என்று இந்நூற் பெயர் குறிக்கப்பட்டுள்ளது. மாறனலங்கார வுரைப் பதிப்பிலும் (பாயி. 27, உரை) 'கயாகர நிகண்டு' எனவே எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

ஆனல் செந்தமிழில் 'கயாகர நிகண்டு' என்று தலைப்புக் காணப்பட்டபோதிலும், அதன்கீழ் வந்துள்ள செய்யுட்களில் கெயாதரம் என்றே கொடுக்கப்பட்டுள்ளது. இந்நூலின் ஏட்டுப் பிரதிகளில் 'கயாதரம்', 'கயாகரம்' என்ற இரண்டு வடிவங்களும் காணப்படுகின்றன. அரும்பொருள் விளக்க நிகண்டுப் பாயிரத்திலும் நூலாசிரியன் பெயர் வருமிடத்து கயாதரன் என்ற பாடபேதங் காணப்படுகின்றது.

இவ்விரண்டு ரூபங்களில் எதனை நூற்பெயராகக் கொள்ளுதல் வேண்டும்? செந்தமிழ்ப் பத்திராசிரியரவர்கள் 'கயாகரர்—சொற்கிருப்பிடமானவர்; கை—சொல்'; என வியுத்பத்தி காட்டியிருக்கிறார்கள்.

---

1. தமிழ்ப் புலவர் சரித்திரம் (அ. குமாரசாமிப் புலவர்) பக்கம் 187; 'கயாகர நிகண்டு' என்றதன் கீழ்

'பரிதி யாதித்தன் இமகரன் பதங்கன் பனிப்பகை விண்மணி யென்றாழ்
அருணன் மார்த்தாண்டன் பாற்கரன் கதிரோ னாயிரங் கதிரினன் தபனன்
இருள்வலி சண்டன் சூரியன் மித்திரன் எல்லியம் போருக நண்பன்
தருமொளி வேந்தன் சூரனே சவிதா தரணிகண் சுடரவ னென்பார்'

என்ற செய்யுள் காட்டப்பட்டுள்ளது. இச்செய்யுள் 'சாதக சிந்தாமணி'யில் 'கால நிகண்டு' என்னும் பகுதியிற் காணப்படுகின்றது.

2. முதலிரண்டு தொகுதிகளே 1861-ல் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

இவ் வியுத்பத்தியும் பொருளும் வடமொழி யிலக்கணத்தின்படி கொள்ளத்தக்கன வல்லவென்று[1] தெரிகின்றது. எனவே 'கயாதரம்' என்பதனையே நூற்பெயராகக் கொள்ளவேண்டியதிருக்கிறது. தொல்காப்பியர் இயற்றியது தொல்காப்பியம் ஆதல்போல, கயாதரர் இயற்றியநூல் கயாதரம் ஆகும். 'கயாதரர்' என்பது गजाधरः என்ற வடமொழியின் திரிபாதல் வெளிப்படை. இங்ஙனம் ஒரு பெயர்[2] வடமொழியிற் கேட்கப்படுகின்றது. இதனால் 'கயாதரம்' என்பதே நூற்பெயரென்பது நன்கு வலியுறுகின்றது.

**நூலாசிரியர் வரலாறு.**

கயாதரரைக் குறித்து நாம் அறியலாவன ஒரு சிலவே. இவர் 'தேவை' என்னும் இராமேச்சுரத்தில் வாழ்ந்தவர்; தம்மைத் 'தேவைக் கயாதரன்' என்றும் (செய். 2, 3), 'தேவையதிபன்' என்றும் (147), 'தேவை நன்னுடன்' என்றும் (223) கூறிக்கொள்கின்றார். அந்தணர் மரபில் உதித்தவர்; தம்மை 'தொல்வேதியன்' எனவும் (2), 'மறையவர் வேந்தன்' எனவும் (147), 'மறைபயில் நாவினன்' எனவும் (187) குறிக்கிறார். இவர் காசிப கோத்திரத்தைச் சார்ந்தவர் (223). சிவ பக்தர்; 'இடப கேதனன் பற்று மறவாதவன்' என்றும் (2), 'வடக்குங்குமக் கொங்கை மங்கைதன் பங்கன் மலரடிக்கீழ்க்—கிடக்குந் தனி நெஞ்சுடையோன்' (4) என்றும் இந்நூல் கூறும். வடமொழியிலும் (147), தென்மொழியிலும் (187, 223) வல்லவர். தமிழில் ஓர் அந்தாதி இவர் பாடியுள்ளாரெனத் தெரிகின்றது.

> 'மேவு மரும்பொரு ளந்தாதி கேட்டிந்த மேதினியோர்
> தாவும் வினைகெடச் சாற்றிய கோன்' (402)

என இவர் கூறப்படுகின்றார். 'இராமேச்சுரக் கோவை' என்ற ஒரு கோவைப் பிரபந்தமும் இவர் இயற்றியுள்ளார்.

> '... ... தமிழ்த் தேவை மன்னுங்
> கோவை யிராமீ சுரக்கோவை சொன்ன குருபரன்'

என்று இவரை இந்நூல் (402) கூறும். நூலின் இறுதியில்

> 'அரும்பொரு ளந்தாதி சூடிய சீதர னம்பிகைபைத்
> தரும்பொருள் செய்த பரம்பரையான்' (566)

என்று வரும் செய்யுட் பகுதியினின்று கயாதரரின் பரம்பரையைக் குறித்து ஓர் அரிய செய்தி கூறப்படுவதாகத் தெரிகின்றது. திருமால்

---

1. இவ்விஷயத்தை ஆராய்ந்து தெரிவித்தவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத்து வடமொழித்துறையில், ஸீனியர் லெக்சரராக இருக்கும் டாக்டர் டி. ஆர். சிந்தாமணியவர்கள்.

2. குந்தகுந்தாசாரியரது ப்ரவசன ஸாரம், ஆங்கில மொழி பெயர்ப்பு, 1935 முன்னுரை பக். xii.

தமது தங்கையைச் சிவபெருமான் மணம் புரிதற்குக் கொடுக்கும்படி இடைநின்று பேசிமுடித்த பரம்பரையை இவர் சார்ந்தவர் என்பதே அச் செய்தி. இச் செய்யுளின் 8-9 சீர்கள் 'பராபரை யாநங' என்று ஏட்டுப் பிரதியிற் காணப்படுகின்றன. 'பரம்பரையான்[றின]ங்' என்பது உண்மைப் பாடமாக இருத்தல் கூடுமெனத் தோன்றுகிறது.

**நூல் தோன்றிய காலம்.**

இந்நூலின் காலத்தைத் திட்டமாக வரையறுத்தற்குரிய சான்றுகள் இல்லை. அரும்பொருள் விளக்க நிகண்டு சாலிவாகனசகம் 1685-ல் (அதாவது கி. பி. 1763) இயற்றப்பட்டது. அந் நிகண்டிலே கயாதரரையும் அவருடைய நிகண்டையும் பற்றிக் கூறப்படுகின்றது. எனவே கி. பி. 1763-ல் கயாதரநிகண்டு மிகப் பிரசித்தமாய் வழங்கிவந்தமை தெளிவாம். இக் கயாதரம் இன்னும் மிகப் பழமையான தென்பது வேறொரு நூலால் விளங்குகின்றது. மாறனலங்கார வுரையில்[1] 'இலக்கண நூல்களை அகவலின் வெள்ளையின் அறைக வென்று முந்துநூல் விதித்தமையுளவாகவும், விதியாது நீக்கிய கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம் என்னும் பாவினத்தாற் பின்பு இலக்கண நூல் செய்தோர் இலக்கணங்களைக் கூறியதும் கற்றோரா லெடுக்கப்பட்டு உலகின்கண் வழங்குத'லுக்கு உதாரணமாக யாப்பருங்கலக் காரிகை, கயாதரம், நிகண்டு சூளாமணி யென்ற நூல்கள் தரப்பட்டுள்ளன. மாறனலங்கார நூலின் ஆசிரியர் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்பவர். இவர் தாமியற்றிய திருக்குருகாமான்மியத்தைக் கொல்லம் 723-ல் அரங்கேற்றினரென்பது

'அறந் திகழாண் டவையெழுநூற் றிருபான் மூன்றில்
அணிகிளர் கார்த் திகைமாத மெட்டில் வாழ்வு
சிறந் திடுதிங் களினுளுத் தரத்தி லேகா
தெசியின் மக ரமுகூர்த்தந் திருந்த முற்றத்
துறந்தவ ரெண் மகிழ்மாறர் திருமுன் னுதிச்
சுருதியுடன் மிருதியுஞ் சொற் றமிழின் வாய்மை
பிறந்த பெருங் காப்பியமும் தெரிந்தோர் கேட்கும்
பெற்றியுட னரங்கேற்றப் பெற்ற தன்றே'

என்று வருஞ் செய்யுளால் அறியக் கிடக்கின்றது. மாறனலங்காரத்திற்கு உரையிட்ட[2] காரிரத்ந கவிராயர் இத்திருக்குருகைப் பெருமாள் கவிராயருடைய சிஷ்யராவர். இவ்வுரையில் திருக்குருகாமான்மியத்தினின்றும் செய்யுட்கள் உதாரணமாக எடுத்துக் காட்டப்படுகின்றன. எனவே இவ்வுரை சுமார் கொல்லம் 750-ல் (அதாவது கி. பி. 1575) தோன்றியிருக்கலாம். காரிரத்னகவிராயர் தென்திருப்பேரை-சுவாமி

1. பாயிரம், 27 உரை.
2. மாறனலங்கார வரலாறு பக். 28.

மகர நெடுங்குழைக்காதர் திருப்பணிமாலையை யியற்றியவரும் மதுரைத் திருமலை நாயக்கர் (கி. பி. 1623-1629) காவை வடமலையப்ப பிள்ளையன் முதலானோரது காலத்தவருமாகிய திருமேனிக் கவிராயரின் தந்தையாராவர்.

கல்விக் கடலைக் கரைகண்ட ரத்னகவி
செல்வக் குமாரன் திருமேனி—நல்ல
திருப்பணி மாலையிந்தத் தேசமெல்லாம் வாழ்த்த
விருப்பமுடன் செய்தான் விரைந்து

என்பது திருப்பணிமாலைச் செய்யுள்.

மேற்கூறியவற்றினின்று கயாதரம் சுமாராக கி. பி. 1575-ல் கல்வியாளர்கள் அங்கீகரித்து எடுத்தாண்ட நிகண்டென்பது விளங்கும். இதற்கு எவ்வளவு காலத்துக்குமுன் இந்நூல் தோன்றியதென்பது விளங்கவில்லை. ஆனால் 'காரிகை யேரு மொருநூலும் பெண்ணுங் கலித்துறையும்' (412) என்று இந்நூலில் வந்துள்ளது. ஒரு நூல் என்றது யாப்பருங்கலக் காரிகையை. எனவே காரிகை தோன்றிய 11-ம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டு இந்நூல் தோன்றியதாதல் வேண்டும். காரிகையென்னும் நூல் நீண்ட காலமாக வழக்கிலிருந்த பிற்பாடுதான், அதன்கண் பயின்றுவரும் கலித்துறைக்குக் காரிகையென்னும் பெயர் வந்திருத்தல் கூடும். 14-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அல்லது 15-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இப்புது வழக்கு ஏற்பட்டதெனக் கொள்ளலாம். இவ்வழக்கு நூலில் எடுத்தாளப்படுதற்கு இது தோன்றி ஐம்பது வருஷ காலமேனும் ஆகியிருக்க வேண்டுமெனக் கொள்ளுதல் தகும். ஆதலால் உத்தேசம் [1]கி.பி. 1450-ல் கயாதரம் இயற்றப்பட்டிருக்கலாமென வரையறுத்தல் தக்கதெனத் தோன்றுகிறது. இக்காலத்திற்கும் கற்றோர்கள் இந்நூலை எடுத்து வழங்கிய காலமெனக் குறித்த கி. பி. 1575-க்கும் 125 வருஷங்கள் இடைப்பட்டிருத்தல் பொருத்தமாதலுங் காணலாம். 'மாறனலங்கார வுரையில் நிகண்டு சூளாமணிக்கு முன்பாகக் கயாதரத்தை அமைத்துக் கூறுவதும் இங்கே அறுதியிட்ட காலத்தோடு பொருந்துகின்றது. நிகண்டு சூளாமணி யென்பது வீரை மண்டல புருடரால் கிருஷ்ணதேவ ராயர் காலத்தில் (1509-1529) இயற்றப்பட்ட ஒரு நூலென்பது நன்கு அறியப்பட்டதே.

---

1. யான் பதிப்பித்த அரும்பொருள் விளக்க நிகண்டின் முன்னுரையிலும், யான் ஆங்கிலத்தில் எழுதிய தமிழகராதியின் சரித்திரம் (History of Tamil Lexicography) என்ற வியாசத்திலும் கயாதரத்தின் கால முதலியனபற்றிச் சில வேறுபாடுகள் காணப்படும். பிற்பட நிகழ்ந்த ஆராய்ச்சியின் பயனாய் மேலை முடிபு கொள்ளப்பட்டது.

நூலின் பிரதிகள்.

கயாதரத்தைப் பதிப்பிடுதற்குக் கிடைத்த பிரதிகள் நான்கு. இவற்றுள் மூன்று ஓலைப்பிரதிகள்; ஒன்று கடிதப்பிரதி. ஓலைப்பிரதிகளுள் ஒன்றும், கடிதப்பிரதியும் மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் உதவியன. கடிதப்பிரதி ஐயரவர்களுடைய ஓலைப்பிரதியைப் பார்த்தெழுதியதே. மற்றை இரண்டு ஓலைப்பிரதிகளில் ஒன்று[1] மதுரைத் தமிழ்ச் சங்கத்திற் குரியது; பிறிதொன்று காலஞ்சென்ற திரு. த. கனகசுந்தரம் பிள்ளையவர்களுக்குரியது. சங்கத்துப் பிரதியும், ஐயரவர்களுடைய ஓலைப்பிரதியும் ஆழ்வார் திருநகரிப் பிரதிகளே. இரண்டும் தம்முட் பெரிதும் ஒத்திருக்கின்றன; ஒன்றில் ஓரிடத்தில் எழுதாது விடப்பட்டுளதாயின், பிறிதொன்றிலும் அவ்வாறேயுள்ளது. இவ்விரண்டு பிரதிகளிலும் முதற்பத்துத் தொகுதிகளே யுள்ளன. சங்கத்துப் பிரதியில் 'கெயாதர நிகண்டு தொகுதி ய: மூன்றுவ தெழுத வேண்டியது; [2]தெய்வநாயகப் பெட்டியில் இருப்பு. திருநகரி-கள்ளபிரான் கவிராயர் ஏடு' என்ற குறிப்புக் காணப்படுகிறது. ஐயரவர்கள் பிரதி கொல்லம் 961-ல் (கி. பி. 1786) எழுதப்பட்டது. கனகசுந்தரம் பிள்ளையவர்கள் பிரதியில் 11 தொகுதிகள் உள்ளன. அஃது எழுதப் பெற்ற காலம் இடம் முதலியனவற்றை யுணர்த்துங் குறிப்பு யாதும் அதன்கண் காணப்பெறவில்லை.

நூலிலுள்ள தொகுதிகள்.

இப்பிரதிகளால் ஓர் ஐயம் ஏற்பட இடமுண்டு. கயாதரம் பத்துத் தொகுதிகளை யுடையதா? அல்லது பதினொரு தொகுதிகளையும் உடையதா? பத்துத் தொகுதிகளும் அமைந்துள்ள அந்தாதித் தொடையைப் பின்பற்றியே பதினொராவது தொகுதியும் அமைந்துள்ளது. பிறதொகுதிகளிற்போல, இத்தொகுதியினிடையேயும் 'கெயாதரத்துள்' (செய். 464) என வந்துள்ளது. அன்றியும் இத்தொகுதியின் இறுதிச் செய்யுள்

'அரும்பொருளந்தாதி சூடிய சீதர னம்பிகையைத்
தரும்பொருள் செய்த பரம்பரையான்[றின]ந் தண்டமிழோர்
விரும்பிய கோவை யுரிச்சொற் பனுவல் விரித்துரைத்தான்
பெரும்பொருள் கண்ட கெயாதரன் றேவைப் பெருந்தகையே'

என்பது. இச்செய்யுளால் இத்தொகுதி கயாதரர் இயற்றியதே என்பது முடிவாக விளங்குகின்றது. அரும்பொருள் விளக்க நிகண்டு இயற்றிய அருமருந்தைய தேசிகரும்,

---

1. இப்பிரதி ஸ்ரீ ரா. ராகவையங்காரவர்கள் சங்கத்திற்கு உதவியதெனத் தெரிகின்றது.

2. ஏடுகள் வைத்துப் போற்றும் பெட்டிகளுக்குப் பெயரிடுதல் மரபாயிருந்ததென்பது இதனால் விளங்குகின்றது.

"ரேவண சித்தன் செஞ்சொற் கயாதர னிவராற் சொற்ற
பாவியல் நூற்கூ றோர்சொற் பல்பொருட் டொகையெலாஞ் சேர்த்து"

எனக் கூறுகின்றார். கயாதரர் சொற்றதாக இவர் குறிப்பிடும் ஓர் சொற் பல்பொருட்டொகை கயாதரத்திலுள்ள பதினோராம் தொகுதியென்பது வெளிப்படை.

**நூலின் சிறப்பியல்புகள்.**

இக் கயாதர நிகண்டு அகராதியின் வரலாற்றில் ஒரு முக்கியமான நிலையைக் குறிப்பிக்கின்றது. திவாகரமும், பிங்கலந்தையும் நூற்பாவினால் இயன்றன. ஒரு சூத்திரத்திற்கும் அடுத்து வருஞ் சூத்திரத்திற்கும் பொருள் பற்றிய தொடர்பன்றி வேறுவகையான தொடர்பு யாதும் இல்லை. ஒரு சூத்திரத்தின்கண்ணேயும் ஓர் அடிக்கும் அதனை அடுத்துவரும் அடிக்கும் உள்ள தொடர்பும் இவ்வாறே. இதனால் சூத்திரங்களை முறையே ஞாபகத்தில் வைத்தல் அருமுயற்சியாலன்றிக் கூடாதாம். எளிதிலே ஞாபகத்தில் வைக்கும்படி சொற்பற்றிய ஓர் தொடர்பிருக்குமாயின், அது மிகுதியும் சௌகரியமாயிருக்குமென்பது கூறவேண்டா. இவ்வகையான தொடர்பினை அமைத்த நூல்களுள் கயாதரம் மிக முந்தியதாகும்.

கயாதரத்தின் அமைப்பில் முதலாவது நோக்கத்தக்கது அது கட்டளைக் கலித்துறையால் இயன்றுள்ளமை. இவ்வகைப் பாவினம் தமிழுலகில் முற்காலத்தில் பெருவழக்காக இருந்தது. யாப்பருங் கலக் காரிகை முதலிய நூல்களும், எண்ணிறந்த கோவைகளும் இதற்குச் சான்று பகர்வன. இனிய ஓசையும் எண்ணினால் வரையறைப்பட்ட எழுத்தமைதியும், எதுகை மோனை முதலியவற்றின் நயமும் இவ்வகைச் செய்யுட்களைக் கற்போர்க்குப் பெருவிருந்தாய் அமைத்தன. இந்நயங்களையெல்லாம் உட்கொண்டு, ஞாபகத்தில் வைத்தற்குத் தக்கதொரு செய்யுளினமெனக் கருதி, கட்டளைக் கலித்துறையால் மகடூஉ முன்னிலையாகக் கயாதரர் தமது நிகண்டு நூலினை இயற்றினர்.

கற்பவர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுதலையே பிரதானமாகக் கருதி வேறோர் உபாயத்தையும் இந்நூலாசிரியர் கையாண்டனர். இவ்வுபாயமாவது நூல் முழுவதையும் அந்தாதித் தொடையாக அமைத்தமையே. தனித்தனியே செய்யுளை ஞாபகம் வைத்தலுக்கு மேலாக, ஏதேனும் ஒரு பொருள்பற்றிய பல செய்யுட்களையும், ஓர் இயல் முழுதுமுள்ள செய்யுட்களையும், வேண்டுமாயின், நூல் முழுவதுமுள்ள செய்யுட்களையும் ஒன்றன்பின்னொன்றாக நினைப்பூட்டுதற்கு அந்தாதித் தொடை மிகச் சிறந்தது. நிகண்டுச் சொற்களை ஞாபகத்தில் நிறுத்துதற்குப் பொருளியைபினைக் கொள்ளாது சொல்லியைபினைச் சங்கிலித் தொடர்போன்று அமைத்துக் கொண்டது அகராதி வரலாற்றில் ஒரு முக்கியமான மேல்நிலையென்பது எளிதின் உணரலாம்.

**நூலினால் விளையும் பயன்.**

இச்சிறப்பு ஒருபாலிருக்க, அரியவான பெயர்கள் ஒருசிலவற்றின் உண்மை வடிவங்கள் இன்னவெனக் கயாதரம் உணர்த்துகின்றது. திவாகரத்தில் புத்தனுக்குரிய பெயர்களுள் 'பாரின்மிசையோன்' என்பதொன்றும் அச்சுப் புத்தகத்தில் காணப்படுகின்றது. புத்தனுக்கு இப்பெயர் வழங்குதற்கு யாதொரு காரணமும் தோன்றவில்லை. பிரதி செய்தோரால் நேர்ந்த பிழை நெடுங்காலமாக உண்மை வடிவத்தை மறைத்து அச்சிற் புகுந்திருத்தல் வேண்டும். கயாதரத்தில் (செய். 14) இப்பெயர் 'பாரமிதையவன்' என்று காணப்படுகின்றது. இது புத்தனுக்குரிய பெயரென்பது கற்றோரெல்லாரும் அறிவர்.

இங்ஙனம் ஒரு சில பெயர்களின் உண்மை வடிவத்தைத் துலக்குவதோடு, ஒரு சில பெயர்கட்குப் பொருள் வரையறை செய்தற் கண்ணும் கயாதரம் பயன்படுகின்றது. 'பைம்மையுங் கௌந்தியும் அருந்தவப் பெண் பெயர்' என்பது திவாகரம் அச்சுப் பிரதியிற் கண்ட பாடம். 'கவுந்தி' எனச் சிலப்பதிகாரத்திற் பல விடங்களிலும் வருகின்றமை ஞாபகத்திற்கு வரலாம். ஆண்டெல்லாம் அச்சொல் அருக சமயத்து மாதவத் தாட்டியின் பெயராக வருகின்றது. எனவே திவாகர அச்சுப் பிரதியில் யாதோரடையுமின்றித் தனிப்பட 'அருந்தவப் பெண் பெயர்' எனக் காணுவது பிழையாதல் வேண்டும். கயாதரத்திலே 'கவுந்தியும் பம்மையு மாருகதத் தவப் பெண்' (செய். 118) எனக் காணப்படுகின்றது. இது பிழையை நீக்கி, இரண்டு சொற்களின் பொருளையும் வரையறை செய்து உணர்த்துகிறது.

இங்ஙனம் உதவுதலோடு வேறொரு வகையாகவும் கயாதரம் பயன் படக்கூடியதாயுள்ளது. நிகண்டுகளனைத்தினும் காலத்தால் முந்தியது திவாகரமாகும். இந்நூல் இன்றுகாறும் திருத்தமாகப் பதிப்பிக்கப் பெறவில்லை. பிரதி செய்தோரால் நேர்ந்த பிழைகள் ஒருபுறமிருக்க, பல சூத்திரங்கள் பிற்காலத்தாசிரியர்களாற் சேர்க்கப்பட்டும், சூத்திர வைப்பு முறை மாற்றப்பட்டும் இருத்தலின் திவாகரத்தின் மூல வடிவம் இன்னதென்றுணர்வது அரிதினுமரிதாய் முடிந்தது. இந்நூலை [1]முதன் முதற் பதிப்பித்த (1835 கி. பி.) வித்வான் தாண்டவராய முதலியாரவர்களும் தாமே பல சூத்திரங்களைப் புதியனவாக இயற்றிச் சேர்த்து அச்சிடுவித்தார்கள். இவ்வாறு புதுக்கிய திவாகரமே இப்போது வழங்குவது. ஆகவே ஆராய்ச்சியாளர்க்குச் சிறிதேனும் பயன்படக்கூடிய நிலைமையில்

1. இப்பதிப்பின் தலைப்பக்கம் வருமாறு: 'புத்தகங்கடோறு மொன்றற்கொன் றொவ்வாது வழூஉக்களாற் பொதிவுற்றுக் கிடந்தமையா லவ்வழூஉக்களைப் பல புத்தகங்களைக்கொண்டு களைந்தும், வேண்டுமிடத்துப் புதுச் சூத்திரங்கள் செய்து உடுக்குறியிட்டுச் சேர்த்தும், பெயர் பிரித்தும்...அச்சிற் பதிப்பிக்கப் பட்டது.

இந்நூல் இல்லை. ஏட்டுப் பிரதிகளிற் பலவாறுகப் பாடங்கள் மாறுபட்டுள்ளன. ஆனால் திவாகரத்தைப்பின்பற்றியே பெரும்பாலும் கயாதரஞ்[1] செல்கின்றது. 'பொங்கிய முன்னூற் பொருள் தெரிந்து...கெயாதரன் செய்தமைத்தான்' (செய். 285) என்பதில் 'முன்னூல்' என்று குறித்தது திவாகரத்தையே யாதல்வேண்டும். உதாரணத்தாலும் இவ்வுண்மை தெளியலாம்.

'நல்லிசை யம்பர்ச் செல்வச் சேந்தனில்
வல்லிற் கல்வியிற் படையிற் கொடையில்
வெல்லுந ரணிவாகை வெற்றிப் பூவே'[2]

என்பது திவாகரம்.

'... ... படையிற் கொடையினற் சூதில் வென்றோர்
யாண்டும் புனைவது வாகையம் போதென் றியம்பினரே'

என்பது கயாதரம் (செய். 220). இங்ஙனம் சூத்திரத்தின் பொருளை விடாதுரைத்துச் செல்வதோடு தொகுதிதோறும் சூத்திரப் பொருளின் வைப்பு முறையையும் பெரும்பாலும் பின்பற்றிச் செல்கின்றது. எனவே ஓரிடத்தில் சில சூத்திரங்களுக்குரிய பொருள்கள் கயாதரத்திற் காணப்பெறவில்லை யெனின், இச் சூத்திரங்கள் திவாகரத்தில் இடைச்செருகலெனக் கொள்ளுவது தகுதியாய் முடிகின்றது. இதற்கேற்ப, திவாகரத்தின் பழம் பிரதிகளில் இச்சூத்திரங்கள் காணப்பெறமாட்டா. இப்பழம் பிரதிகளில் அச்சுப்பிரதியிற் காணப்பெறுத சூத்திரமொன்று இருக்குமாயின், அச்சூத்திரப் பொருள் கயாதரத்துக் காணப்படுதல் ஒருதலை. இரண்டு நூல்களுக்கும் மிக நெருங்கிய தொடர்பு இருத்தலினாலே, பாடநிச்சயஞ் செய்து திவாகரத்தைத் திருத்தமுறப் பதிப்பித்தற்குக் கயாதரம் பெரிதும் பயன்படுவதாம். திவாகரம் எட்டாவது நூற்றாண்டில் இயற்றப்பெற்றதொரு நூலாதலின், அக்காலத்துத் தமிழ் நூல்களில் வழங்கிய சொற்களை ஆராய்தற்கும், தமிழ் மக்களுடைய அறிவின் அளவினை ஆராய்தற்கும் அந்நூல் ஒரு சிறந்த கருவியாகும்.

இனி, கயாதரத்திற் காணும் சில விசேடங்களைக் குறித்துச் சொல்ல வேண்டுவனவுள. ரகரத்தையடுத்து வல்லினம் வரும் வட சொற்களை யெடுத்தாளும்பொழுது, வல்லினத்திற் கியைய றகரங்கொடுத்தே ஆசிரியர் யாண்டும் ஆளுகின்றனர்.

**நூலிற் காணும் சில மரபுகள்.**

உதாரணமாக: இரணிய கெற்பன் (13), கந்தற்பன் (21), காற்பாசம் (195, 276), சற்கரை (517, 548), சுவற்கம் (32, 417, 420, 437, 443), சொற்கம் (136), துற்கம் (54, 77), துற்கை (27, 455), மற்கடம் (161), மாற்கணம் (246), மாற்கம் (68, 533), மாற்சாரம் (160)

1. திவாகரத்தில் ஐந்தாவதாகக் காணப்படும் இடப்பெயர்த் தொகுதி கயாதரத்தில் இரண்டாவதாக உள்ளது; காரணம் புலப்படவில்லை.

2. இச்சூத்திரம் அச்சுப் பிரதியில் காணப்படவில்லை.

என்பன காண்க. இவ்வாறெழுதுதல்[1] முற்காலத்து மரபு என்றே நாம் கொள்ளுதல் வேண்டும். இச்சொற்களை இக்காலத்து முறைக்கேற்பத் திருத்தி அச்சிடுதல் தக்கதன்றாம். இவ்வெழுத்தமைப்பு முறையை வடமொழியில் ரகரம் வருதற்கு இயைபில்லாத ஒரு சில்லிடங்களிலும் கயாதரர் பின்பற்றுகின்றனர். உதாரணமாக பற்மம் (217, 225), சொற்பனம் (347) என்பனவற்றைக் காண்க.

ஒரு சில தமிழ்ச் சொற்கள் தமக்குரிய நேரிய வடிவத்திலன்றிச் சிறிது ரூபம் பிறழ்ந்து காணப்படுகின்றன. உதாரணம் ஈன்றணுமை (334), சிலாங்கை (225), துடை (134), நாகரீகம் (316), பவுறி (531), மகிட்சி (561), மகுணன் (124) என்பன. இவற்றையும் ஒருசார் வழக்குப் பற்றியனவென்றே கொள்ளுதல் வேண்டும். ஒரு சொல்லால் இதனை விளக்குகின்றேன். மகிழ்நன் என்ற சொல் 'மகிணன்' (இறையனார் களவியல் 1, பக். 18) என்றும், 'மவுணன்' (சிலப்பதிகாரம் 6, 37 உரை, மேற்கோள்) என்றும் வந்துள்ளது. இவ்விரண்டு வடிவங்களையும் நோக்கும்பொழுது 'மகுணன்' என்பதும் வழக்கிற் புகுந்திருத்தல் கூடுமெனவே தோன்றுகிறது. அணுமை என்பது பிரதிகளிற் காணப்படுகின்றமையை ஸ்ரீ டாக்டர் சாமிநாதையரவர்களும் குறித்திருக்கிறார்கள் (ஐங்குறுநூறு, முகவுரை, பக். 6). ஆதலால் மேலே குறித்த சொற்களையெல்லாம் பிரதிகளிற் காணப்பட்டவாறே தந்துள்ளேன்.

ஒரு சில வடசொற்களின் ரூபங்களை நிகண்டாசிரியர்கள் சிலர் திரியவுணர்ந்து, அவற்றைத் தம் திரிபுணர்ச்சிக்குத் தகமாற்றி வழங்கியுள்ளார்கள். இங்ஙனம் மாற்றிய வடிவங்களைக் கயாதரர் எடுத்தாண்டுள்ளார். உதாரணமாக, தாசோகம், ஆர்கூடம் என்பன காண்க. தாசோகம் என்பது தாஸேரக என்பதன் திரிபு; ஆர்கூடம் என்பது ஆரகூட என்பதன் திரிபு. இச்சொற்கள் அரும்பொருள் விளக்க நிகண்டு முதலியவற்றிலும் காணப்படுகின்றன. பரிசாரம் என்று மற்றை நிகண்டுகளில் வழங்கிய சொல்லைக் கயாதரர் 'பரிசார்' (143) என்று படித்து வழங்குகின்றனர்.

'குலீனன்' (113) என்ற சொல்லை 'குல ஈனன்' என்று பிரித்துக் கொண்டு அதன் பொருளைப் பிறழவுணர்ந்து 'குலீனன் குலமில்லவன்' என்று கயாதரர் செய்யுளியற்றியமை வியப்பினை விளைக்கின்றது. இந்த இடத்தில் பிரதிசெய்தோராற் பிழை நேர்ந்திருக்க வேண்டுமென்றே தோன்றுகிறது. இங்ஙனமே 'இராமேச்சுரக்கோவை' எனவரற்பாலது 'இராமீசுரக் கோவை' (402) எனப் பிரதியிற் காணப்படுவதும் எழுதுவோரால் நேர்ந்த பிழையாதல் வேண்டும்.

---

1. வடசொற்களில் உள்ள ரகரத்தைத் தமிழில் வல்லின றகரமாக வழங்குவது பசுந் தமிழென்பர் (தக்கயாகப். 35 உரை).

கடைசியாக, இக்காலத்துப் பொருள் விளங்காத சில அடைமொழிகளைக் கயாதரர் வழங்குகின்றனர். குலித்த (207), திவரும் (444), துயிரில் (517) முதலியன உதாரணங்களாம்.

மேல் விவரித்தவாறு பல திறத்தானும் போற்றுதற்குரிய இக்கயாதர நிகண்டு தமிழ் நாட்டில் இப்பொழுது கிடைப்பதரிதாகிவிட்டது. இதனைப் பரிசோதித்தற்குக் கிடைத்த ஓலைப் பிரதிகள் மூன்றேயெனக் கூறினேன். இப்பிரதிகளாற் கிடைத்த பாடபேதங்களை அடிக் குறிப்பாகக் காட்டியிருக்கிறேன். அடிக் குறிப்பிற் காணும் தடித்த எண்கள் நூலின் செய்யுளெண்களாம்; மற்றையெண்கள் செய்யுளின் சீர்க்குரிய எண்களாம். பிரதிகளிற் காணுதலின்றி என்னால் ஊகிக்கப்பட்டன இரு தலைப்பகரத்துள் [ ] கொடுக்கப்பட்டுள்ளன.

பதிப்பில் மேற்கொண்ட நியமங்கள்.

பதினோராந் தொகுதி ஒரு பிரதியில் மாத்திரம் இருந்தமையாலும், பலவிடங்களில் எழுத்துக்களும் தொடர்களும் பிறழ்ந்தும் மறைந்தும் போயினமையாலும், இத் தொகுதியைச் செப்பம் செய்தலில் மிக்க சிரமம் ஏற்பட்டது. உதாரணமாக,

'துயிரி லமவலி சொறமயின கஙக நறஹா செனனலகெமபு' (செய். 517)

என்ற அடியின் உண்மை வடிவங் கண்டுபிடிப்பது எத்தனை அருமைப்பாடென்பது கண்டுபிடிக்க முயன்று தெரிந்து கொள்ளலாம். செய்யுட்கள் பெரும்பாலனவற்றிலும் இத்தனை பிறழ்ச்சி இருக்குமாயின், இதனால் நேர்ந்த அல்லற்பாடு சொல்லுந்தரத்ததாகுமோ? பெரிதும் முயன்றும் மூன்று செய்யுட்களைத் (468, 477, 496) திருத்தியமைக்க இயலவில்லை. நான்கு செய்யுட்கள் (479, 494, 503, 519) அடி நிரம்பாமலுள்ளன; இவைபற்றி யான் செய்தற்குரியது யாதுமில்லை.

இப் பதினோராந் தொகுதியைப் பதிப்பித்தலிற் சில நியமங்களை மேற்கொண்டேன். பலபொரு ளொருசொல் தடித்தவெழுத்திற் காட்டப்பட்டுள்ளது. அச்சொல்லின் பொருள்கள் முடியுமிடத்தில் அரைப்புள்ளி (;) இடப்பட்டுள்ளது. அச்சொல் தெளிவாக விளங்கும்படி சந்தி பிரித்துத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

உதாரணமாக,

'**குருகு** இள மைகை வளையுலை மூக்குக் குருக்கத்திபுள்;' (419)

என்ற அடியில் குருகிளமை என்று சந்தி புணர்த்தாது பிரித்திருத்தலும் 'குருகு' என்பது தடித்த எழுத்தில் அச்சிட்டிருத்தலும், இறுதியில் அரைப் புள்ளி கொடுத்திருத்தலும் காணலாம்.

கடின சந்திகளும் பிரிக்கப்பட்டிருக்கின்றன. உதாரணம் நரல்தல் (398) முதலியன.

இந்நியமங்களை ஏனைத் தொகுதிகளிலும் கையாண்டிருப்பின் நலமேயாகும். ஆனால் இரண்டாவது அனுபந்தத்தில் இத்தொகுதிகளிலுள்ள ஒவ்வொரு செய்யுளிலும் அடங்கியிருக்கும் பொருள்களை விடாது காட்டியிருத்தலினாலே, இந்நியமங்கள் அத்துணை ஆவசியகமில்லையெனக் கருதப்பட்டது. மூன்றாவது அனுபந்தத்தில் பல்பொருளொருசொல்லின் அகராதி தரப்பட்டிருக்கிறது.

# கயாதரம்

## பாயிரம்

1. ஆரண நான்கும் பரவமுழ் மூர்த்திக ளாகிநின்ற
காரணன் பாகங் கலந்துல கீன்றருள் கன்னிபெற்ற
பூரணன் பாரதப் போர்வட மேருப் பொருப்பில்வைத்த
வாரணன் வாரணப் போரில்வென் றோனென் வழித்துணையே.

2. பேதையர் பித்த ரறியாத பாலர்சொற் பேதங்கொள்ளார்
ஓதினுங் குற்றந் தெரியார் பெரியவ ரோங்கிடப
கேதனன் பற்று மறவாத தேவைக் கெயாதரன்றான்
வேதியன் சொற்ற வுரிச்சொற் பனுவலு மேம்படுமே.

3. வளர்ந்த முதனூல் வழிநூல் வழிச்சென்று மற்றவையும்
அளந்து சிறியோ ரறியும் படிபெரி யோரருளால்
தளர்ந்தன நீக்கி யுரித்தாய சொல்லைத் தமிழ்ப்படுத்தான்
கிளர்ந்த பெரும்புகழ்ச் சோமீசன் தேவைக் கெயாதரனே.

4. வடக்குங் குடக்குங் கொங்கை மங்கைதன் பங்கன் மலரடிக்கீழ்க்
கிடக்குந் தனிநெஞ் சுடையோ னுரிச்சொற் கிளர்பனுவல்
குடக்குங் குணக்கும் வடக்குந்தென் பாலுங் குவலயத்து
நடக்கும் படியாக் கெயாதர மென்றுபேர் நாட்டினனே.

தேன ருமகிழ்த் தொடையலு மௌலியுந் திருக்கிளர் குழைக்காதுங்
கான ருமலர்த் திருமுகச் சோதியுங் கயிரவத் துவர்வாயும்
மோன மாகிய வடிவமு மார்பமு முத்திரைத் திருக்கையும்
ஞான தேசிகன் சரணதா மரையுமென் னயனம்விட் டகலாவே.

பொத்தகம் படிக மாலை குண்டிகை பொருள்சேர் ஞான
வித்தகந் தரித்த செங்கை விமலையை யமலை தன்னை
மொய்த்தகொந் தளக பார முகிழ்முலைத் தவள மேனி
மைத்தகு கருங்கட் செவ்வா யணங்கினை வணங்கல் செய்வாம்.

இவை நூற்குப் புறம்பாக ஒரு பிரதியில் தரப்பட்டுள்ளன.

**1.** 3 பெருகமும்; 15 பொருப்பில்வைத்தோன். **2.** 5 பேதங்கொள் [illegible]ா(து); 8 தெளியார்; 15 கெயாகரன்றான். **3.** 2 முதுநூல்; 5 மற்றவை யும்; 11-13 தளர்ந்த புகற்குரித் தாகிய. **4.** ஒரு பிரதியில் இல்லை. 4 பாகன்.

முதலாவது

# தெய்வப் பெயரியல்

5. ஆதி யனாதி யரன்சிவ னீசனா னந்தனத்தன்
சோதி பினாகி யுருத்திரன் பிஞ்ஞகன் சூலிசுத்தன்
பாதி யுமாபதி சங்கரன் கங்கா தரன்பகவன்
பூதி புனைபாண்ட ரங்கன் பரமன் புராந்தகனே.

6. தக்கன் மருகன் சதாசிவ னைம்முகன் சம்புநித்தன்
இக்கன் படவிழித் தோன்கால கால னிறையமலன்
முக்கண் முதல்வன் பசுபதி கங்காளன் முத்தன்பித்தன்
நக்கன் சடையோன் விடையூர்தி நாகா பரணனென்னே. 2

7. என்னன்னை சத்தி யபினை யிமைய வதியிகல்வேள்
தன்னன்னை நீலி கவுரி யுமைசிவை தாரணிக்கு
முன்னன்னை யம்பிகை யாரியை பார்ப்பதி மூதறஞ்செய்
மின்னன்னை யில்லவன் காதலி நாமம் விளம்பரிதே. 3

8. அரிகரு ணாகரன் கேசவன் கோவிந்த னச்சுதன்மால்
கரியவ னாரணன் பீதாம் பரன்வரன் கார்கமலைக்
குரியவன் விண்டு முராரி முகுந்த னுலகமுண்டோன்
வரியுர கன்பகை யூர்வாக னன்கண்ணன் மாதவனே. 4

9. மாயன் றிரிவிக் கிரம னெடியோன் மதுசூதனன்
ஆயன் வரையெடுத் தோனா ரசிங்கன்பஞ் சாயுதன்கற்
கியுந்தா மோதரன் செல்விமா வாக்கந் திருவருளை
ஏயும் பொறிபொன் மலரா ளரிதேவி யிந்திரையே. 5

10. இந்து முடிக்கண் ணுதல்சேய் கணபதி யேகதந்தன்
தந்தி முகத்தன் விநாயக னைங்கரன் சாமளைதன்
மைந்தன் பெருவயிற் றுக்குறுந் தாளெந்தை மால்மருகன்
அந்தமி லேரம்பன் பாசாங் குசனாகு வாகனனே. 6

11. வாரண கேதனன் குன்றெறிந் தோன்மயி லூர்திகந்தன்
தாருகற் காய்ந்தோன் முருகன் கடம்பன் சரவணன்சேய்

இந்த இயல் ஒரு பிரதியில் 'வானவர் பெயரியல்' எனவும் பிறிதொன்றில் 'தெய்வப் பெயர்த்தொகுதி' எனவும் காணப்படுகிறது.

**5**. 4 னீசன; 19 புராரி. **6**. 7 படவீழ்வித். **7**. 3 யிபனை; 7-8 நாரணன் றங்கை. **8**. 10 காற்கமலைக்; 18 யூர்வாம; 20 மாயவனே. **9**. 11 கேயுந்தா, சேயுந்தா. **10**. 10 சாமளமான். **11**. 7 சாய்த்தோன்.

கூரயி லேந்தி குகன்கார்த்தி கேயன் குமரன்செவ்வேள்
சூர்பகை சேந்தன் விசாகன்வேள் வள்ளி துணைவனென்னே. 7

12. துய்யவன் வேதா விதாதா விதியிறை சூதன்றொன்னாற்
கையவ னான்முகன் மால்மக னெண்கணன் காசினிக்கு
வெய்யவன் றாதை பிதாமகன் றாதா விரிஞ்சன்வெள்ளைத்
தையறன் கேள்வ னயன்பர மேட்டி சதானந்தனே. 8

13. தாதவிழ் போத னிரணிய கெற்பன் சதுமறையோன்
பாதலந் தந்தோன் பிரசா பதிகம் பதுமவுந்தி
சாதனன் னக்கொடி யோன்சம்பு வாணிவெண் டாமரைமேல்
மாதறி வாட்டி கலைமகள் பாரதி நாமகளே. 9

14. நாமந் திகழ்முப் பிடகன் றவன்சாந்த னல்லறிவன்
காமன் பகைவ னனுக்கிரன் புத்தன் கருமமுத்தன்
வாமன் சுகத னறவன் றதாகதன் மாமுனிவன்
கோமன்னு பார மிதையவன் போதியான் கோதமனே. 10

15. கோதி லருகன் றிகம்பர னெண்குணன் முக்குடையோன்
ஆதி பகவ னசோகமர்ந் தோன றவாழியண்ணல்
சோதி முனைவன் சினேந்திரன் பொன்னெயில் நாதன்சுத்தன்
போதி னடந்தோ னதிசயன் சாந்தனற் புங்கவனே. 11

16. புரந்தர னிந்திரன் பொன்னுல காளிவெண் போதகத்தன்
பரந்திகழ் வாசவ னாகண் டலன்பாக சாதனன்பூ
தரஞ்சிற கீனஞ்செய் வச்சிர பாணி சதமகவான்
துரந்த வலாரி யரிமுகி லூர்தி சுரர்பதியே. 12

17. பங்கய நாதனற் பாற்கரன் சாயா பதிபதங்கன்
செங்கதிர் சூரிய னாதித்தன் மார்த்தாண்டன் றேரருக்கன்
பொங்கரி பானு வுதையன் றிவாகரன் போதருணன்
தங்கு மிரவி தரணி யலரி தபனனென்னே. 13

18. எண்ணெண் கலையோ னிரவோ னுடுபதி யிந்துவிதுத்
தண்ணென் சுடர்சோம னம்புலி யாலோன் சசிசந்திரன்
வண்ணம் புதியோ னிமகர னாண்மலர் மால்மனத்தன்
நண்ணுங் குபேர னமுதா கரன்றிங்க னாண்மதியே. 14

**12.** 5 சூதன் கொன்னாற்; 14 வேதா. **14.** 1-2 நாமன் றிகழ்முப்; 6-10 சாமன் பகைவ னுருத்திரன் முத்தன் தருமன்புத்தன்; 13 (ன்)றருமன். **15.** 15 நாதன்முத்தன்; 18 னதிசெயன். **16.** 5 போதகத்தின். **17.** 1-2 பங்கின னாதபன். **18.** 1 எண்ணுங்; 14 னாமலர்.

19. மதியமு தாசனர் வானோர் விபுத ரிலேகர்வரர்
அதிதி தருஞ்சுத ரும்ப ரிமையோ ரமரர்செம்பொற்
பதியுறை வார்சுரர் புத்தேளிர் பட்டா ரகர்பகவர்
கதிதரு பண்ணவர் புங்கவர் தீர்த்தர் கடவுளரே. 15

20. கடவுளர் தெவ்வர் தகுவர் தயித்தியர் காரவுணர்
அடர்திதி புத்திரர் தானவர் பூகண் டகரசுரர்
படரு நிருதர் நிசாசர ரேபிசி தாசனர்பார்க்
கிடர்செய் பவர்யாது தான ரரக்க ரிராக்கதரே. 16

21. கன்னல்வில் லோன்வே ளனங்கன் வயந்தன்கந் தற்பன்மதன்
மன்மதன் காமன் மதுசகன் சித்தசன் மால்புதல்வன்
உன்மத பாணன் மலரம்பன் வேனிலோ னேங்கிரதி
தன்வசன் மீனக் கொடிமாரன் சம்பர சூதனனே. 17

22. தனத னளகைமன் பிங்கலன் மந்திரி சம்புநண்பன்
கனகன் குபேர னிருநிதிக் கோன்முற் கரன்மாகதன்
நனகன புட்பக மூர்பவ னுத்தர கோனரவா
கனன்வைச் சிரவணன் மாயோ னியக்கர்தங் காவலனே. 18

23. வடுகன் றமருகன் கஞ்சுகன் சூலி மனவணிவோன்
முடுவனூர் காரி வயிரவ ஞஞ்சாத வாகனன்முற்
றடுபடை யையன் கரியூர்தி சாத்த னரியரன்சேய்
கொடிதிகழ் வாரணன் காரிசெண் டேந்துகைக் கோதண்டனே. 19

24. தண்ட தரன்றென் றிசையோன் றருமன் சமனடுவன்
சண்டன் யமன்ஞம னந்தகன் கூற்று மறலிசண்டன்
திண்டிறற் காலன் வருணன் சலபதி சிந்துபதி
கொண்டனூர் பாச தரனுரு முப்படைக் கொற்றவனே. 20

25. கொற்றி வடுகி கொடுமோடி காடுகாள் கூளியின்
முற்று மயில்சூரி காரிதாய் மாரி முகடிதவ்வை
மற்றுங் கலதி கரடக் கோடிமங்கை வாலேபமூர்
பெற்றியள் கேட்டையுஞ் சேட்டையு மூதேவி பேரென்பரே. 21

26. பேரரி யூர்தி பயிரவி சாமுண்டி பேய்க்கொடியாள்
தாருகற் காய்ந்தா ளியோகினி வேதாளி சண்டியெண்டோட்

**21**. 4 வசந்தன்கந்; 8 மதிசகன்; 12 பாலன். **22**. 8-9 னிதிக்கோ னமுத. 9 கோன்மற்; 11 தனகன; 16 கனன்வச். **23**. 10-11 வண்ணன்முற்று மடுபடை, வானன்முற்று மடுபடை. **24**. 7 யமனம; 10 மறலிசண்பன்; 14 சுவபதி. **25**. 5 கூளிமின; 7 மயில்சூலி; 8 காரிமாய். **26**. 14-15 கண்ணி வெங் கூற்றுசந்தாள்; 15 கூத்துவந்தோள்; 20 மாதியென்னே.

கூரிலைச் சூலிகங் காளிமுக் கண்ணிபேய்க் கூத்துகந்தாள்
மாரிநல் வீரிதொன் மாகாளி யாமளி மாதரியே. 22

27. மாலுக் கிளையாள் மயிடற் பகைகொற்ற வைவெய்ய
நீலத் திருக்கலை யூர்சுந் தரிவிந்தை நீள்விசயை
சூலச் சியமக ளாரியை நாரணி துற்க்கைக்கன்னி
பாலைக் கிழத்தி திகிரியெண் டோளி பகவதியே. 23

28. திசைபுகழ் வானவர் நாயகி யிந்திரன் தேவிபுலோ
மசையயி ராணி சசிசுந் தரிகங்கை மந்தாகினி
மிசைவரு வானவி வானதி பாகீ ரதிவிமலை
இசைசுர சிந்து வரநதி யெண்ணுந் திரிபதையே. 24

29. பதந்திகழ் விஞ்சையர் கோசரர் விச்சா தரர்பெயர்பண்
இதந்தரு கின்னரர் வீணையர் தந்திரர் காந்திருவர்
மதங்கொள் கிருத்திமஞ் சாரத மாகோ தரமருள்வெங்
கதங்கொள் குறள்கூளி பாரிடம் பூத கணமென்பரே. 25

30. கணங்கடி கூளி யலகைவே தாளங் கழுதுமண்ணை
பிணங்கவர் சோகு பசாசு குணபாசி பேயதென்பர்
அணங்குசூர் சூர்மகள் வஞ்சனி யோகினி யாகிரணி
வணங்கும் வலவை யிடாகினி சண்பனி மாயவளே. 26

31. மாகங் ககனம் வெளியந் தரமண்டம் வானமங்குல்
மீகம் வியோமம் விசும்பம் பரங்குடி லாசினிவிண்
நாகங்கோ மாதிரங் காட்டை யரிதந்திக் காசைபுல
மேகஞ் செறிகுகு பந்திசை வம்பல் விசும்புலகே. 27

32. புலமாகந் தானஞ் சுவவு சுவற்கம்வான் பொன்னகர்மே
லுலகங் கமம்பர மீதுறக் கம்விசும் பும்பருயர்
நிலைசுரர் நாடுவிண் ணுகம் வியனகர் நீடுகற்பம்
உலவை சமீரன் சதாகதி கந்த வகனொலியே. 28

33. ஒலியுயிர் வாதம் வளிமா ருதம்வெற்ற மூதைகொண்டல்
சலனன் பவன னரிநீழை நீல்மால் பரிசனன்மா
பெலன்மருத் தாசுகன் கோதை யனிலன் பிரபஞ்சனன்
வலபவ மானன்கால் கூதிர்வங் கூழ்காற்று வாயுவுமே. 29

**27.** 11-12 சூலக் கையா; 18 திகரியெண். **28.** 3 நாயக(னி); 4 யிந்திரை; 16 இசைசுரர்; 19 யென்னுங். **29.** 10 காந்தருவர்; 17 குறண்கூளி. **30.** 15 யாகவெணி; 16 யிணங்கும். **31.** 6 வீகம்; 19 பம்பல். **32.** 1 புலந்திகழ்; 7-10 (ம்) பயமா துறக்க மமருல கும்பருயர். **33.** 11 பெலமருத்; 14 யனிலம்; 15 பிரவஞ்சனன்; 16 மலைபவ.

34. வாடை வடந்தை வடகாற்றுக் கொண்டல்கீழ் காற்றுமற்றுங்
கோடைமேல் காற்றுக் குளிர்பனிக் காற்றாதை கூதிருமாம்
நீடு வயந்தன் மலையக்கால் மூந்தா நிலமுந்தென்றல்
ஓடுந் திசைபத்தி னும்பத்துப் பேர்பெற் றடம்பினுமே. 30

35. உதாசன னங்கியங் கார்க னேசோதி யோங்குவசு
வதியனல் பாவகன் றென்கிழக் கோன்சுசி வன்னிகனல்
அதர்கரி யோன்சித் திரபானுச் சாதவே தாவரியர்ச்
சிதனெரி வாயு சகன்றாம கேதுச் சிகிதழலே. 31

36. தழுவுந் தகன னெரிநா ஞெகிழி தனஞ்செயன்றீ
வழுவில் சுவலன் முளரி யழல்வா டவமடங்கல்
உழலும் வடவை கடையன லூழி யனல்வெகுளி
பழகுஞ் சிவங்காலங் காமஞ் சடம்பஞ்ச வக்கினியே. 32

37. வனமுத கந்தோய மப்பம்பு வாரி வருணமமாங்
கனமலர் கீலால நாரங் கவந்தங் கமலமயம்
புனலறல் நீரஞ் சலிலம் கிலமமு தம்புவனங்
கனவிர தஞ்சீவ னஞ்சீவ னீயங்கங் காண்டமுமே. 33

38. காணுங் குசஞ்சம் பரந்தீர்த்தம் வார்புட் கரமமுதம்
பாணி சலம்பய நீர்க்கோ முகி[ல்]பா னியமளகம்
பேணும் பிரவாக நீத்தம் பிரளயம் வாரிவெள்ளம்
பூணும் புனற்கர சன்வரு ணேசன் பொலங்கொடியே. 34

39. பொலந்தா ரகையுடுத் தாரா கணஞ்சோதி பொங்கொளிபந்
தலம்புகழ் நாண்மீன் கலைகண மாத்திரை சாற்றுநுட்பம்
இலங்கு நிமிடங் துடிகால நுட்ப மிருத்தைகன்னல்
நலங்கொள் விகலை கடிகை பதமிவை நாழிகையே. 35

40. கைதரு வேலை யமையம் பதம்போது காலைபொழு
தெய்திய காலமு மேல்வையு மாகுமென் றாழாதபம்
பெய்த வெயில்பிற்றை பின்றை யெனுமிவை பின்னருச்சி
தையல்கேள் நண்பகல் நாட்காலை யந்தியைச் சந்தியென்னே. 36

**34.** 13-15 மலைக்கால்மந் தாநிலத்தென்றல் தென்கால். **35.** 1 உதகாசன ; 4 ன்சோதி ; 15-16 தாவரியத் திதனெரி. **36.** 1 தழலுந் ; 9 யனல்வா ; 11 அழலும் ; **37.** 5 வருணவமாங், வருணம் பிமாங் ; 14-15 கிலமுக மும்புவனங் ; 20 காண்டகமே. **38.** 7-10 சலங்கோப் புனநீர மேகம் பயமளகம். **39.** 1-7 பொலனுடுச் சோதி தாராகணம் பந்தா ரகையொளிநாட் டலம்புகழ் பம்மீன் ; 14-15 மாகு மிலுத்தை கன்னல். **40.** 5 காலம்பொழு ; 7 காலையு ; 14 யெனுமவை ; 15-16 பின்னருமாங் தையுச்சி.

41. சந்தித்த யாமமுஞ் சாமந் தினந்திவ சம்பகலெல்
வந்துற்ற காலை திவாவா மிரசனி மாலைகங்குல்
முந்துற்ற யாமினி யெல்லி நிசாநிசி முந்துமல்கல்
இந்துச்செல் யாமம் விபாவரி நத்த மிரவுமல்லே. 37

42. இருளந்த காரந் துவாந்தந் த[ம]நீல மேய்ந்தநத்தந்
தெருளுந் திமிர நிசியிரு ளாகுந் திவாத்திவச
மருளுந் தினம்பகல் வைகலு நாளா னியமுமென்பர்
நெருநலு நென்னலு முன்னைநா ளாக நினைந்துரையே. 38

43. உரைதரு பாணு ளரைநா ளிருணு ளுருப்பம்வெப்பம்
திரிதரு மொல்லை சிறுவரை யாகுஞ் சிறுபொழுதே
வரைதரு மூழி மடங்க லுகமாயு ளாயுகம்வாழ்
தரவரு நாள்நான் முகனு ளதுகற்பஞ் சாற்றுவரே. 39

44. வருமுகில் கொண்ட லெழிலி குயின்மேக மாரிவிண்கந்
தரமழை சோனை விசும்புகார் வான்விண்டு தண்கனஞ்செல்
பரிமிகு சீதமை மஞ்சுமால் கொண்மூப் பயோதரமும்
பொருவில் புயல்மங்குல் சீமூத மம்புதம் பூந்திருவே. 40

45. திவலை பெயன்மர்ரி யாலி யுறைதளி சீகரமே
துவலை பிசிர்சிதர் தூறல்சீ தாரி துளிசிதறி
நவில்சிர கஞ்சீர மூர்கோள் பரிவேட நாடில்வட்டம்
இவருரு முச்செல் லிகுளே யசனிவா னேறிடியே. 41

46. ஏறுந் தடித்துத் தடிந்துச் சபலைமின் சஞ்சலையே
தூறுந் தலையல் மழைவிடல் சோனை பணித்தலிவை
மாறி விடாது சொரிதல் மதிதிங்கள் மாதமென்ப
தேறும் பருவ மிருதுவொ டானியஞ் செப்புவரே. 42

முதலாவது தேய்வப்பெயரியல்

முற்றும்.

**41**. 2-5 யாமமென் சாற்றுந் திவசந்தினம் பகலெல் ; 16 இந்துல. **42**. 10 தியாந்திவச ; 11 மருளாந் ; 13-15 வைகல்நா ளாமா னியமுமென்க ; 18-19 முன்னநாளார. **43**. 4 ளிருநா, ளிருணு ; 7 மெல்லை ; 10 சிறுபொழுது ; 20 சாற்றுகவே. **44**. 1 கருமுகில் ; 12-15 சீதம் பெயன்மஞ்சு கொண்மூப் பயோதரமால் ; 19-20 மையம் புதந்திருவே. **45**. 4 யுறைதுள்ளி ; 10 துளிசிதரி ; 11 நவில்சீர ; 11-13 நவில்பெயல் வாராழாமகொள ; 20 னேறறியே. **46**. 5 சஞ்சலையாந் ; 10 பனிற்றலிவை, பனித்துளிசொன் ; 15 மாதமென்பர் ; 19 ரானியஞ்.

### இரண்டாவது

## இடப் பெயரியல்

47. புலந்தரை மண்குப் புவ்வன மவனி புவிவிபுலை
தலஞ்சகந் தாலமே கோநகர் பூத்தா ரணிதரணி
நிலந்தறை மேதினி காசினி தாத்திரி நீடுலகம்
பலந்தரு ஞால மசலை வசுந்தரை பார்படியே. 1

48. படியு மளக்கர் குவலையம் பூதலம் பாரிவையம்
புடவி பொறைநேமி மண்டலம் பூமி புவனியக்
லிடமகி வேலா வலையந் திணைவரைப் பிம்பர்பொழில்
நடுவுகஞ் சாந்தை பிருதுவி தால நவகண்டமே. 2

49. கண்ட மகலு ளுலகேணி தேசங் கருதுசும்மை
மண்டிலம் பாடி சனபதந் தண்ணடை மண்பைதிரம்
பண்டிதர் நாடென்பர் நாடு புவனந் தலம்பவனங்
கொண்ட புடவி பொழிலுல கின்பொதுக் கொள்வரைந்தே. 3

50. வரைகுவ டோங்கல் பொருப்புச் சிகரி மலைவிலங்கல்
கிரிதட மோதிமம் பூதர நாகங் கிளர்கிரி
தரணி யசலந் தராதரம் வேதண்டஞ் சையம்வெற்பத்
திரிங்கம் பொற்றை சிலோச்சயஞ் சாரல் சிலம்புகுன்றே. 4

51. குறும்பொறை மாதிரங் கோத்திரம் விண்டு குறும்புபறம்
பிறம்பு நவிரந் துறுகற் சயிலஞ் சிலையிரவி
பிறங்கல் பதலை யடுக்கல் பருப்பதங் குத்திரம்பே
ரறஞ்செய் சுரர்மலை பொன்மலை மேரு வரன்சிலையே. 5

52. சிமையம் பொதிய மலையந் தமிழ்மலை தென்மலையாம்
இமைய மிமவான் மலையாகு மன்றுல கீன்றபச்சை
யுமைதந்தை நாமஞ் சயிலாதி வெள்ளியங் குன்றுலகிற்
கமையுங் கயிலாயங் கண்ணுத லோன்பொருப் பாதிவெற்பே. 6

53. வெற்பின் சிகரங் குவடு கொடுமுடி கோடுமிக்க
கற்புழை காண்டை பிலங்கீ ழுறைகஞ் தரமுடுக்கர்

**47**. 5 புவிவிபுதை ; 7 (ங்) காசினி ; 11 நிலம்புய ; 13-14 தாத்திரி நீருடை. **48**. 8 மண்டிலம் ; 14 திரைவரைப் ; 16 நடுவகஞ் ; 17-19 சாந்தைநற் றூலம் வசுதை. **49**. 6 மண்டலம். **50**. 6 கிரிகட ; 15 சையம்வெற்புத். **51**. 4 வண்டு ; 5 குறம்புபறம் ; 10 சிலையிரலை. **52**. 2 பொதியின் ; 5 தென்மலையும் ; 11 யுமைதந்த.

சொற்குக ரங்கன் முழையறை பாறை பொறைதுறுகல்
பற்பல வாரங் கடஞ்சாரல் மால்வரைப் பக்கமென்னே. 7

54. கல்லுச் சிலையுப லஞ்சிறு கல்லா முலங்கற்றிரள்
சொல்லிய நூழை சுருங்கை நுழைவாயில் துற்கமரண்
கல்லின் பிளப்பு விடர்விடா விட்புக் கமர்பிளவாம்
செல்லும் பதுக்கை முரம்பு சிறுதிட்டை திட்டைதிட்டே. 8

55. திரையலை சாகரம் வேலா வலைய முவரிசிந்து
நரலை சலராசி யம்பர மத்தி நளிர்சலதி
பரவை நதிபதி முன்னீ ரளக்க ருதததிபௌவம்
வருணம் புணரி மகராலை யம்வீரை வாரியுப்பே. 9

56. வாராக ரம்பா ருடையுவா வேலை மகோததிநீர்
கார்கோள் சமுத்திர மார்கலி நேமி மணியாகரம்
பாராவா ரத்தோ டரலைப்பே ரோதம் பயோநிதியே
பேராழி வாருண மன்ன[வ] மின்னும் பெருவெள்ளமே. 10

57. பெருங்கலி யோதம் புணரி கடற்றிரைப் பேரறலே
தரங்கந் திரையலை கல்லோலந் தாவுஞ்வீசிகரமாம்
வரம்பு வரைகூலம் பாரந்தீ ரம்பாகு வாரங்கரை
குரம்பு வரப்புக் குலைசேதுச் செய்கரைகோடணையே. 11

58. அருவி மலைச்சார லாறு கலுழி யுயவைமுல்லை
தருகானி யாறு துறைநதி யுந்தி தடினிசிந்து
வருபுனல் தீர்த்திகை யாபகை மாதுனி வார்குடிஞை
பெருகிய தீப வதியா றொலியலிப் பேரறியே. 12

59. அழிவில் புகாரோ டதோமுக மாகுங் கழிமுகமும்
இழிதரு சூழி தடாகம் படுக ரிலஞ்சிமடுச்
சுழிகொ ளலந்தை கயங்கேணி பட்டஞ் சுனைகிடங்கோ
டொழிவில் நளினி சலதரம் வாவி யுவளகமே. 13

**53.** 12 ரங்கான்; 15 பொறுதுறுகல். **54.** 2-3 சிலையாம் வலந்திரள், சிலையா சலந்திரள்; 7 னூழை; 8 சுருக்க(னு); 9 நுழைவாசல்; 13 விடர் பிடர்; 14 விட்டுக்; 15 கமர்பிளப்பாம்; 19 பரல்சுவல்; 20 தட்டைதிட்டே. **55.** 10 நவில்சலதி; 19 யம்நீரை. **56.** 5 மகோததிவார்; 10 காமணி யாம்; 15 பயநிதியே; 18-19 (ஞ்) சக்கரம் வம்மி, (ஞ்) சாகரம் வம்மி. **57.** 5 பேரமண்ணல்; 9-10 தாவும் விசிதரமும், தாவும் விசிரமுரம்; 16-20 குரம்பு குலைசேதுச் செய்கரை யாந்தடங் கோடணையே; 17 வரைப்புக். **58.** 14 யேதுனி. **59.** 19 ஆவி.

60. வளந்தரு கோட்டகம் பண்ணையொ டேல்வை வலையங்குண்டு
குளந்தட மாவி மடுவோடை யேரி மலங்கல்குட்டம்
அளந்த துருத்தி யிலங்கை யரங்கமு மாற்றிடையாங்
கிளர்ந்தநற் கூவ லசும்பு துரவு கிணறென்கவே. 14

61. கயங்குண் டழுந்தாழும் பௌவம் நுரைபுற் புதங்குமிழி
வயங்கும் பிராறும் வழாறு நிறைபுனல் வாரியுமாம்
உயங்கு முறவியூற் றுக[ா]த மூற லுயர்புளினந்
தயங்கு மணற்குன்று வாலுகம் வெண்மண ருழ்குழலே. 15

62. குழையள றள்ளல் குழம்புகா லாழ்செய்பல் கொள்ளந்தொள்ளி
பழகிய சேதகம் பூழி யளக்க ரளறுபங்கம்
அழகுசெய் தொய்யல் செதும்பு தொளிசே றசும்பங்கணம்
விழைகொள் சகதி நரம்புபொல் லாக்குழி மெல்லியலே. 16

63. மெல்லத ரெக்க ரறலயிர் நுண்மணல் வேலையுடன்
சொல்லுவ ராற்பாரா வாரங் கடற்கரை சூழ்கழியாம்
புல்லிய நன்முகங் காய லளங்கானல் பூழிபொடி
முல்லை புறவம் புறம்பணை யாமுற் குறிஞ்சிக்குமே. 17

64. குழைதரு மென்பா லகணி பணைபானல் கொள்கழனி
பழனம் வயல்செறுச் செய்கம் பளமும் படுகரும்பேர்
கழுவ் மருதங் கடற்சார்பு நெய்தல் கருநிலப்பற்
றழுவந் துருக்கம் குறும்புவன் பால்பாலை யாகுநன்கே. 18

65. நகர்பதி சேரி புரம்புரி யாகரம் நல்லிருக்கை
அகலுள் குறிப்பட்டுக் கோசரம் பாழி யணிநகரி
புகலிடஞ் சும்மை யெயில்வேலி பாக்கமும் பூண்டியுமூர்
இகலுஞ் சிறுகுடி சீறூர் குறிச்சி குறிஞ்சிக்கென்னே. 19

66. எண்ணிய பட்டினம் நெய்தல் குறும்பு முனையிடமும்
அண்ணிய பாலை குடிக்காடு பூக்க மகலுள்பதி
தண்ணடை பூரியம் பாக்க மருப்ப முறையுள்தப்பாப்
பண்ணிய வாழ்க்கை மருத நெடுமுல்லை பாடியென்னே. 20

**60.** 7 (ம்) வாவி; 10 யலங்கல் குட்டம்; 11 அளந்தை; 18 (ல்)தசும்பு. **61.** 3-20 ஒரு பிரதியிற் காணப்படவில்லை. **62.** 5 தொள்ளந் தொள்ளி; 10 ரளறுபங்கம்; 12 தொய்யில்; 15 றசும் பணங்கம்; 19 லாக்கும்பி. **63.** 1-3 மெல்லியல் பூழ்தி யலையயிர்; 12 வூரகங்; 14-15 லளங்காண்க பூழையுடன். **64.** 3-5 ல் கணிபணை பானல் கொளுங்கழனி; 9 பளநெற்; 11 தழுவு; 17-20 அருக்கம் வன்பாலை குறும்பென் றறைவர் நன்கே. **65.** 3 புரமாரி; 8 கோச்சரம்; 20 குறிஞ்சியெண்ணே. **66.** 9 பாக்க; 13 ஆக்க.

67. பாடு கழிகூ ழிருக்கைதோ ணுமுகம் பல்பதியு
நாடிய பேரூர் மடப்பங் கிரியா றடுத்தநல்லூர்
கேடகம் போரேற் றுறையிடம் பாசறை கேடொன்றில்லாக்
கூடல் மதுரை யுறையூர்[ப்] பெருநகர் கோழியென்னே. 21

68. கோடுயர் வஞ்சி கருவூர்கா கந்தி புகார்நியமம்
பீடிகை யங்காடி யாவணங் கூலங் கடைபிழைப்பில்
வாடை நியம மறுகா வணம்வீதி மாற்கஞெள்ளல்
நாடிய கோசுங் தெருவாஞ் சதுக்கமு நாற்சந்தியே. 22

69. சந்தி கவலை யரிலந்தில் சாருஞ் சினகரமே
மந்திரங் கோட்டம் பிராசாதம் சேதியம் வாய்ந்தகுலம்
அந்தமில் பள்ளி நிலைய நிகேதன மாலயமு
முந்துந் தளிகோயில் தேவர் நகர்களை மொய்குழலே. 23

70. மொய்குழல் மாட மனையுறை யுள்புக்கில் முன்னிடவ
ல்கைபதி பாத்தில் வசதி யிடமகங் காணியில்லம்
வெய்ய பவனம் வயின்சேர்வு வீடு வியன்கழகங்
துய்யவர் கல்வி பயில்களங் கல்லூரி கல்விசொல்லே. 24

71. சொற்ற விறையிறப் பாமென்பர் தாழ்வாரஞ் சோபானமாஞ்
சிற்றில் குரம்பையுங் கூரையுந் திண்ணைமண் ணீடுதிட்டை
தெற்றிநல் வேதிகை யங்கண முன்றில் திருந்துநிலா
முற்ற மரமிய மஞ்சு விடங்க முகடென்பரே. 25

72. முகந்தெரி சாளரஞ் சாலகஞ் சாலேக நூழைமுன்னர்ப்
புகன்றவா தாயனங் காலத ராகும் பொதுப்பொதுவில்
நிகழ்ந்தமன் றம்பல மாமென்ப ரத்தாணி நீளரசு
வகைந்த விருக்கை யடுக்களை யட்டில் மடைப்பள்ளியே. 26

73. பள்ளி சயன மமளி படைசேக்கை பாயலுறை
யுள்ளரி கட்சி துயிலிடம் பாழி யுயர்சட்டகங்
தெள்ளிய பட்டமுஞ் சேர்விட மாக வுயர்திணைக்கு
விள்ளுவர் கொட்டி லொருசிறை துச்சிலும் வேறிடமே. 27

**67**. 8 மடம்பங்; 13 றுறைபதி. **68**. 1-5 கோடுயர்பில் காகந்தி கருவூர் புகார்வஞ்சி கூர்நியமம்; 9 (ம்)ஆகுங். **69**. 2 திவலை; 10 வந்தகுலம்; 15 மாலயமே; 18 ஓம. **70**. 6-7 கைபதில் பாத்தி; 19-20 கல்வி கல்லூரி சொல்லே. **71**. 3 பாமென்ப. **72**. 6-9 புகன்றநல் வாதாய னங்கா லத ரா[illegible]; 15 நீளரசர். **73**. 2-3 யமளி சயனம்; 6 யுள்ளிய; 14-16 மாகு முயர் திணைக்கு விள்ளவர்.

74. வேறுங் கழகம் படைசூது மல்லும் விரும்புமிட
மாறு படுமிட மாடிடஞ் சூதிட மாமரங்கம்
கூறும் பிறப்பிட மாகரஞ் சித்திர கூடங்தெற்றி
யேறம் பலம்பணை மந்திரம் வாசிக் கியல்பந்தியே. 28

75. பஞ்சரங் கட்சி குடம்பைகூ டாகும் படுகளத்தோ
டஞ்சுங் களரி யடுகள மாகவ பூமிமற்றும்
எஞ்சு மமர்க்களஞ் செங்களம் போர்க்களந் தெம்முனையே
துஞ்சும் பறந்தலை பூதவே தாளங்கள் சூழ்களமே. 29

76. சூழு மயானம் புறங்காடு காள வனஞ்சுடலை
தாழும் பிதிர்வன மீமஞ் சுடுகாடு சாற்றுமிஞ்சி
வாழுமெயில் சுற்றுக் காப்பரண் காவல் வரைப்புநொச்சி
ஆழும் புரிசை மதில்வேலி வேணகை யாரலென்னே. 30

77. ஆரு முவளகம் வன்சிறை துற்க மரணஞ்சுற்று
வாரி தகைப்புடன் கோட்டையு மாகு மதிலுருப்புக்
கூரும் பதப்பாடு தோணி விதப்பெங் திரங்கோசமே
நேரும் பொறிநாஞ்சில் ஞாயிலு மாமென்று நேர்ந்தறியே. 31

78. அஃகழி கிடங்கோ டகப்பாப் பரிக மகழ்புதவும்
இகலுந் துவாரமும் வாரியுந் தோட்டியும் வாயிலென்பர்
புகலும் வரைவை தடிசெறுப் பாத்தி புனவயலே
திகழும் விளையுள் கழனி விளைநிலஞ் செய்புகலே. 32

79. புகலு முதைப்புனந் தொல்புன மாகு மிதைப்புனமும்
பகரும் புதுப்புனந் தோட்டந் துடவை படப்பைதொய்யல்
உகவுந் துடவை யுழுத வுழவு தொழில்விளைப்பாம்
அகலுந் தொடுப்பு மிரிசி வரம்பா மருகுகங்கே. 33

80. அருகவல் பள்ளம் பயம்பே யுவளக மாம்படுகர்
பெருகிய வன்மீகம் புற்றுக் கரம்பை பெருங்களரி
கருகு களர்பாழ் முதுபார் கவலை கவர்நெறியாஞ்
சுரமோ டருநெறி யத்தங் கடறுடன் தூம்பென்பரே. 34

**74**. 4 (ம்) வல்லும்; 9-10 (ம்) வட்டாடிட மரங்கம்; 12 பிறப்பில. **75**. 9-11 மாகவஞ் செம்புலத்தோ டெஞ்சும்; 12 பரிக்களஞ். **76**. 3-9 பிதிர்வனங் கான்வனஞ் சூழ்சுடலை தாழும் புறங்கா டனீம மாமென்க; 20 யாரையென்னே. **77**. 9 மென்பர்; 17 பொறிஞாஞ்சில்; 18 வாயிலு. **78**. 12 வரவை, மவான; 20 செப்புவரே. **79**. 10 படப்புத்தொய்யல். 17 தொடுப்பா; 18 மரிசில், மருஞ்சி. **80**. 5 மாழ்படுகர்; 13 முதுப்பார்; 20 தூம்பு மென்னே.

81. தூரிய வட்டை வயவு வகுந்து தொடர்வொழுக்குத்
தாரி நடவை நெறிபத மார்க்கஞ் சரியயனம்
ஆரிடை செப்ப மியவை வரியா றதர்பதவை
வாரி யிகுவை செலவு வதிவழி வார்கிறியே. 35

82. வாய்புலம் பாங்கர் வயின்களம் வைப்பு மருங்குவழி
தேவகை பட்டி யுழைகடை சூழல் திணைவலங்கால்
பாயிடை சார்கண் வளாகந் தலந்தானம் பால்புடையே
மேதகு ஞாங்கர் மருங்குமுன் னும்பின்னு மேலுமென்னே. 36

83. மேல்மிசை யும்பர் பரமீ வலமேக்கு மீதுசிறை
பாலுழி மாடு மருங்கு புடையயல் பாங்கர்பக்கங்
கோலிய தூக்கு நிவப்புப் பருமங் குடுமியுச்சி
ஏனு முவண முடன்மோடு துங்க மிவையுயர்வே. 37

84. இவணிம்ப ரும்ப ரவணீண்டு மாண்டு மிவணவணுங்
தவலின்றி நீள்ளு நனந்தலை நாப்பண் சமமிடைநாத்
திவர்கின்ற வுந்தி நடுவொத்தல் மத்திமஞ் செப்புமெல்லைக்
கவருங் குரோசமுங் கூப்பீடுங் காவதங் காதமென்னே. 38

இரண்டாவது இடப்பெயரியல்

முற்றும்.

**81**. 2 விட்டை; 5 தொடரொழுக்குத்; 14 யரியா; 17 யிருவை; 20 வார்கிளியே. **82**. 6 தேயவகை; 8 யுழைநிலம்; 11 ஆயிடை; 15 பாலுமிட; 16 மேய்தரு; 18-19 மருங்குடன் முன்னரு. **83**. 6-7 பாலுழை பாடு; 9 புடைஞாங்கர்; 15 குடுமியுந்தி; 16 மேலு. **84**. 2-3 ரெம்ப ரெவணீண்டு.

சாமிநாதையரவர்கள் பிரதியில் **84,** 7 முதல் **151,** 4 முடியவும், சங்கத்துப் பிரதியில் **84,** 10 முதல் **151** முடியவும் காணப்படவில்லை.

மூன்றாவது

## மக்கட் பெயரியல்

85. காய்ந்தவர் கோபந் துறந்தவர் யாவுங் கடிந்தவர்மெய்
வாய்ந்தவ ரையர் முனிவ ருயர்ந்தவர் மாதவத்திற்
கூர்ந்த முனைவ ரறவோ ருறுவர்மெய்க் குற்றமற்றோர்
ஆய்ந்த வறிஞர் தபோதனர் தாபத ரந்தணரே. 1

86. அந்தமில் காளா முகர்மா விரதிகள் பாசுபதர்
தந்தன சைவ சமையத் தவர்தேரர் சாக்கியரும்
வந்த பவுத்தர் சமணரா சீவகர் சாரணரு
முந்திய வாரு கதர்சா ரணரு முனிவர்களே. 2

87. முனிவ ரிருபிறப் போர்விப் பிரரையர் மூதறிவோர்
நனிதிகழ் வேதியர் பூசுர ரந்தணர் நான்மறையோர்
தினகர ஞாத ரறுதொழி லாளர்முத் தீவளர்ப்போர்
பனவ [ர் புரி]நூலர் மேற்குலத் தோர்வேத பாரகரே. 3

88. கற்றவர் சான்றோ ருயர்ந்தவர் நல்லோர் கரியுலகம்
உற்றவ ரான்றோர் பெரியோ ருடனு ரியபுரவோர்
முற்று முணர்ந்தவர் பேரவை கற்றோர் முதுவர்சங்க
மற்றுங் கலைஞ ரறிஞர் புலவர்நூல் வல்லவரே. 4

89. வல்லவ ராகும் விபுதர் நிபுணர் குசலர்மற்றே
நல்ல குரவன் பெருமான் முதல்வன்கோ நாதனையன்
சொல்லு மிறையச்ச னத்தன் பெரியோன் சுவாமிபதி
[ய]ல்லது மாசா னுடன்சாமி கோமா னடிகளென்னே. 5

90. அண்ணல் குருசி லுடன்செம்ம லேந்தலுந் தோன்றலுமாங்
கண்ணாந் தலைமை சிறந்தவர் பேர்செம்மல் காவலன்கோன்
எண்ணுந் தலைவ னதிபன் பிரான்வேந்த னீசன்மன்னன்
நண்ணும் பதிகாந்த னுத னிறையாதி நாயகனே. 6

91. நாவலர் போற்றும் புரவலன் வேந்த னரபதிகோன்
காவலன் பா[ர்]த்திபன் பூபாலன் பூபன் கலைநிருபன்
கோவுல காள்மன் னி[ராச] னரசன் குருசிலண்ணல்
மேவு மகிபன் மகிபதி கொற்றவன் வேந்தனென்னே, 7

86. 9 தவர்தேர; 18 கதர்கா. **88.** 10 ரியருறவோர்.

92. வேந்தரிற் கேரளன் பூழியன் கொங்க னுதியன்மிக்க
போந்தடார் கண்ணியன் வானவன் கொல்லிப் பொருணைமன்னன்
கூர்ந்த குடநாடன் குட்டுவன் வில்லவன் கோதைவஞ்சி
வாய்ந்த பதிச்சேரன் சேரலன் வான வரம்பன்பொன்னே. 8

93. பொன்னித் துறைவ னனக னபையன் புலிக்கொடியோன்
சென்னி புனனாட னாரிய னேரிச் சிலம்பன்கன்னி
மன்னு நரபதி செம்பியன் சோழன் வளவனன்னீர்
கொன்னவில் கோழிப் பதியோ னிரவி குலத்தவனே. 9

94. குழுமிய கூடற் கொருகோன் கவுரியன் கோற்கைதவன்
செழியன் றமிழ்நாடன் பஞ்சவன் மீனவன் றென்னவன்போர்
வழுதி மலைய[ன் குமரித் துறையவன்] வைகைக்குமன்
பழுதில் புகழ்மாறன் பூழியன் நிம்பத்தார்ப் பாண்டியனே. 10

95. பார்க்கிற் பரதர் கவுரவ ராகுங் கு[றும்பராட்டர்]
நோக்கிய வேளிர் புரோசர் குறுநில மன்னர்நுண்ணூல்
வாக்கினர் தேர்ச்சித் துணைவ ரமைச்சர் வருபொருநர்
ஆக்குந் தலைமைபெற் றோர்[பரி] யாளம் பரிவாரமே. 11

96. பட்டம் புனையு மமாத்திய ரேனாதி காவிதியென்
றொட்டிய பேர்மங் திரிதங் திரிக்கென்ப ரோங்கிளங்கோ
எட்டிய ரிப்பர் பரதர் வயிச்சிய ரேர்த்தொழிலோர்
செட்டிகள் நாய்கர் கவிப்பர் வணிகர் செலேட்டிகளே. 12

97. கருமஞ்செய் காராளர் வேளாள ரேவெண் களமர்பினோர்
மருவு முழவர் சதுரத்தர் வார்த்தையர் மண்புதல்வர்
பெருகிய சூத்திரர் மாமாத் தியர்பிட கர்மருத்து
வருமுப் பமைப்ப ருமண ரளவரு மாவர்மற்றே. 13

98. மற்றுங் குலால ருடன்கும்ப காரர்வேள் மட்பகைஞர்
முற்றும் குயவர்வேட் கோவரு மாகு முழுதும்வல்லோர்
கற்ற தபதிய ரோவியர் கொல்லர்கம் மாளர்சிற்பர்
அற்ற யவனர் புனைவித் தகரக்க சாலையரே. 14

99. சால்கஞ்ச காரர்கன் னார்கன் னுவர்தரு காழியருங்
கால்கொண்ட வண்ணார்பேர் காரோட ரேயுறை காரரென்பர்

**92.** 19 மான. **94.** 3 றெருகான். **96.** 13-15 பரவிரிசசியராத் தொழிலோர். **97.** 16-20 வரும வருபபடு மணரமைபபரளரு மாவமற்றே. **98.** 13 ரோவியக்.

தோலென்றும் விற்போர் பறம்பராஞ் சூனரு மூன்விலைஞர்
மால்கொள் பழையர் துவசர் படுவர்கள் வாணியரே. 15

100. வாய்ந்த குணுங்கர் கவுண்டர் கனகதர் வங்கர்புல்லர்
சேர்ந்த புலைஞ ரிழிஞர்சண் டாளர்பேர் சென்னியரே
சார்ந்த வயிரியர் மாகதர் சூதர் மதங்கர்தப்பா
ஏய்ந்த விசைகாரர் பாடல்வல் லோர்பா[ண] ரென்பர்களே. 16

101. பண்டரு மோவரும் பாடற்கீழ் மக்கள் பெருமஞ்சிகர்
மிண்டு மயிர்வினை நாவிதர் வீரயிலர் கூத்தர்மிக்க
கண்டவே ழம்பர் கழா[ய்] ரியவர்தோற் கைவினைஞர்
கொண்ட நரப்புக் கருவிவல் லோர்கள் குயிலுவரே. 17

102. வம்ப ரதிதி புதியோர் நொதுமலர் வாலுவருந்
தம்பமில் கூவியர் [பாகி] தவ[சி]யா ரட்டர்தம்மை
நம்பிய தொண்டு தொழும்பாம் பதிகர் வழிநடப்போர்
வெம்பிய சாரணர் தூத ருசாவொற்றர் வேய்ப்பர்மின்னே. 18

103. மின்னிவர் வேலன் முருகன் படிமத்தன் வேள்வெறியாட்
டுன்னிய தேவரா ளன்மூகை மூங்கையு மூமையென்பர்
தென்னியல் சேடர் சிலதர் சிலதியர் சேடியரோ
டின்னும் பரிசன மேவல்செய் வோர்பெய ரெல்லீயே. 19

104. வளந்தரு பேடியர் பேடுகள் பேடர்கள் பெண்டகர்மற்
றுளந்தரு சண்டங் கிலிப மலியென்ப ரோதுசிந்து
தளர்ந்த குறள்வாம னங்கோணல் கூன்குஞ்சந் தாழ்செவிடே
அளந்த வெதிர்முடம் பங்கென வோதின ராய்மயிலே. 20

105. மருவிய பூரியர் நீசர் கயவர்கீழ் மக்கள்புல்லார்
கருதிய பேதையர் தீம்பர் முசுண்டர் கலர்முசுடர்
திருகிய வாக்கர் சிறுமைபொல் லார்கையர் சீத்தைகல்லார்
அருளிலர் மூர்க்கர் [சு]மடர்தீ யோர்பொறி யற்றவரே. 21

106. அற்றவன் போத[ஞ்] சிதடன் முழுமக னஞ்சிழுதை
மற்றுஞ் சளன்பேதை யாதனெ டண்ணை மடங்குதலை
முற்றி[ய] வஞ்ஞையு மூடனு மாமா துலர்முயற்சி
யிற்றவ ரார்த்தர் துயருறு வோரென் றிசைப்பர்களே. 22

**100.** 5 வங்கர்புல்லார். **101.** 13 கழாது. **104.** 13 னங்கண்கோணல்.
**106.** 2-4 போதமுழுமனசிதட. 9 டன்னை.

107. கள்ளர் கரவடர் சோரர் விழைவவாக் காதலிச்சை
விள்ளு நயத்தல் விருப்பார்வம் வேண்டுதல் வேட்டல்நச்சுக்
கொள்ளு நசைவாஞ்சை யாதர வாசை கொடியபற்றும்
உள்ளு முது[ே]வா ரறிவோர் கிழவ ருரியவரே. 23

108. வல்லாளன் மீளி விறலோன் விடலை வயவன்வென்றி
நல்லோன் பெயர்[கா முகர்]சது ரர்நாக ரீகர்நல்லோர்
ஒல்லும் விடர்காம மிக்கவர் தூர்த்த ரொழுக்கமில்லோர்
எல்லா மியவுள் புகழோன் வியவனு மேவுவனே. 24

109. ஏவிய காளை குழக[ன்] மழவன் மு[ரு]கனின்னு
மேவிய சேடன் குமர னிளையோன் பெயர்மெய்கற்றோர்
நாவலர் மங்கலப் பாடக ரோடெட்டர் நற்கவிகள்
பாவலர் பல்கலை வல்லோர் கடிகையர் பாண்ெ[மா]ழியே. 25

110. மொழியு நிருத்தர் பொருநர் நடியரா முன்[னுந]டர்
வழிபடு கண்ணுளர் கோடியர் கூத்தர் வயிரியரோ
டொ[ழி]வி லவினைய ரேசூதர் வந்திய ரேபுகழ்வோர்
பழுதில்வே தாளியர் மாகதர் பூகதர் பப்புவரே. 26

111. புகல்வா துவருட ஞதோ ரணரானைப் பாகர்பொற்பிற்
ககலா வலவருஞ் சூதருந் தேர்ப்பாகர் வாதுவரே
இகலார் பரிமர் வடிப்போ ரிரவலர் யாசகரோ
டகலாத பாடகர் பட்டர் பரிசிலோ ராமென்பரே. 27

112. ஆன மறவர் பொருநரே ருள ரயிலுழவர்
மானவர் வீரர் செருநர் திறலோர் வயவர்மள்ளர்
தானை யபையர் தறுகண்ணர் கூளியர் சூரர்தப்பா
ஏனைய சல்லியர் கூவனூல் வல்லவ ரென்றுகொள்ளே. 28

113. கொண்டோற் பிழைத்துப் பெறுமகன் குண்டகன் கோளகனுங்
கண்டோர்க்குக் கைம்மை பெறுமகன் கன்னிசேய் கானீனனும்
வண்டார் குலீனன் குலமில் லவன்வல்ல வன்வலவை
தண்டாத வல்லுந ரல்லோர்வல் லார்மாட்டா தாரறியே. 29

114. அரிபர ரொன்னார் மடங்கா ரமரா ரமித்திரரே
கருதல ரொல்லார்நவ் வார்மரு வார்கறுத் தாரடர்வோர்

**107.** 4-15 பண்புப் பெயரியலில் வரற்பாலன. ‘ஆதரங் காமம்’ **(312)** என்ற செய்யுளைக் காண்க. **109.** 3 குழவ. **110.** 4-5 நொடியராமுனடாட; 12 லவினைஞெ...ரடு. **111.** 15 வாசகரோ. **113.** 1 கொண்டோர்ப்; 12 குழவினன்; 17-18 வல்லுணர் வல்லோர்.

தரியல ரொட்டார் செறுநர்கள் ளார்தெவ்வர் சாரலர்மா
றிரிபகை நேரார் நிகரார் முனைந்தா ரெதிர்ந்தவரே. 30

115. தக்கவர் துன்னின ரொன்றினர் கூடினர் சாலவன்பு
தொக்கவர் நள்ளுந ரொல்லுநர் மேவின ருந்தொடர்ந்தோர்
ஒக்கல்கேள் கூளி குடும்பு துணைநட் புறவுசுற்றம்
மிக்க கடும்பு கிளைதமர் பந்தம் விருந்தமுமே. 31

116. விரைதரு மாடவ ராடூஉ மகன்மைந்தன் மேவுபுமான்
நரருடன் மானிடர் மானவர் மாக்கள் மனுமனிதர்
புருடரோ டாளனு மாந்தரு மாகும் புனைந்துரையால்
அரிவைய ராடவர்க் காகும் பெயரோ ரளவில்லையே. 32

117. அங்கனை நாரி மகடூஉத் தெரிவை யரிவைமகள்
மங்கை மடந்தை பிணாமானி கா[ரி]கை வஞ்சனியே
தங்கிய தையல் மடவரல் மாது தளிரியல்பெண்
எங்கும் வனிதை பெதும்பைமா யோள்பேதை யேழையுமே. 33

118. ஏமஞ்செய் கோமா ளடிகள்கோ மாட்டி யிறைவியத்தை
சாமி குரத்தி பெருமாட்டி யாசாள் தலைவியை[ய]
நாமங் கவுந்தியும் பம்மையு மாரு கதத்தவப்பெண்
சேமங்கெ[ாள்] கைம்மை கயினி கலன்கழி சேயிழையே. 34

119. இழைபுனை வேசியர் கூத்தியர் சூளைய ரெண்கணிகை
விழையும் பரத்தை நடிப்போர் பொதுப்பெண்டிர் போர்விறலி
பழகிய பாடினி பாட்டி மதங்கியும் பாண்மகளாம்
வழியுடன் செல்வோ ளெ[மி] மைம்மை வந்தை மலடிமின்னே. 35

120. மின்னிவர் வேலனு மீளியுங் காளை விடலையும்பா
லைந்நிலங் காவலன் பேராம் குறவ [ர]ரும்புனவர்
மன்னு மிறவுளர் குன்றுவர் கானவர் வாழ்குறிஞ்சித்
தன்னில மக்கள் கொடிச்சி குறத்தி தலைமகளே. 36

121. தலைமகன் வெற்பன் பொருப்பன் சிலம்பன் தருபொருநன்
நிலைபெறு கானக நாடனு மாம்விந்தர் நீள்பொதுவர்
குலவில் குடவ ரிடையர்கோ பாலர் தொறுவர்நன்கோ
வலரண்ட ரண்டரான் வல்லவ ராய ரமுதரென்னே. 37

**116.** 7 மானுடர். **118.** 3-4 னடிகள...ராடம. **119.** 6 விசையும்; 15 பாணர்களாம். **120.** 14 தானவர்.

122. என்றுந் தொறுச்சிய ராய்ச்சிய ரேன்ற பொதுவியரே
துன்றுங் குடத்திய ராகு மிடைச்சியர் தோன்றலண்ணல்
முன்றிகழ் கானக நாடன் குறும்பொறை நாடன்முல்லைக்
கொ[ா]ன்றுந் தலைவன் னுளையர் பரதவ ரின்னமுண்டே. 38

123. உண்டாம் வலைஞர் கலவர் திமில ருததியருங்
கொண்டார்க ணெய்த னுளைச்சியர் கூறும் பரத்தியருந்
தண்டாத வந்நில மாதர் தலைவன்பேர் கொண்கன்மன்னுங்
கண்டார்கள் மெல்லம் புலம்பன்[றுறைவன்]கடற்சேர்ப்பனே. 39

124. சேருங் கள[ம]ர் தொழுவர் விளைஞர் செறுவர்மள்ளர்
வாருங் களைஞர் கடைய ருழவர் வருகம்பளர்
பேரென்க வாற்றுக்கா லாட்டி யுழத்தி கடைசியர்பேர்
ஊரன் மகுணன் கிழவன் மருதத் துரியவனே. 40

125. உரிய மனைவி கிழத்தியில் லாளில் லுயர்மருதத்
தரிய தலைவி[யர்]க் காமுல்லை மாதர்க்கு மாகுமென்க
தருதந்தை யெந்தை பயந்தோ னையனப்பன் றாதையத்தன்
பெருகுமெம் மானும் பிதாமா துலன்மாமன் பேர்முன்னெல்லே. 41

126. எல்லை மணமகள் காதலி காந்தை துணைவியில்லாள்
வல்லபி பாரியை நாயகி தா[ர ம]னைவிமனை
நல்ல வுரிமை தடைவிருந் தங்கற்பி னுள்கிழத்தி
வல்லி சிறுவி தனையை புதல்வி மகட்பெயரே. 42

127. மதலை சிறுவன் றனையன்கால் சந்ததி மைந்தன்மகன்
புதல்வன் பிறங்கடை யெச்சம் வழித்தோன்றல் புத்திரன்சேய்
குதலை பொழிபின் பிறங்கு மகவு குழவிசெம்மல்
உதவி[ய] குட்டன் குருளை சுதன்பிள்ளை யோதினரே. 43

128. ஓங்குஞ் சிறாரு மகாருஞ் சுதர்பன்மை யோதுநண்பன்
பாங்க னெனுவன் றுணைவன்கேள் தோழன் சகாயன்பொய்தல்
பாங்கிநற் சேடி யி[ண]ங்காயந் தோழி பயிலிகுளை
தாங்குந் துணையோரை யெ[ல்]லா வெடிமுன் னிலைசாற்றுமே. 44

129. சாற்றுங் கணவன் பதிதோழன் காதலன் றான்றலைவி
தேற்றும் புதல்விநற் றோழியுங் காதலி சேனைதண்டங்

124. 10 வருகம்புளர். 125. 5-6 லுயமதை திரிய. 128. 16-17 காங்குந் தனையோரை.

தோற்றும் பதாதி பதாகினி யூகந் தொடர்[வாகி]னி
மாற்றும் படைபாடி வானி யநிகம் வரூதினியே. 45

130. வரு[ங்]கட கந்தந் திரஞ்சர்து ரங்க[ம்] வரூதமற்றும்
பெரும்படை தானைதார் தூசி பகுதி கொடிப்படைப்பேர்
கருங்குழை சூழ்கடைக் கூழையொட் டுண்டை[யுங்] கையணியோ
டிரும்பெயர் யூகம் படைக்கை வகுத்த லெனமதியே. 46

131. மறவர் புளிஞர் கிராத ரெயினர் வனசர்சில்லர்
குறவர் கலர்வேட ராறலைப் போர்மா குலர்சவரர்
இறவுள் வியாதர் கருநிலத் தோர்கா னவருமக்கட்
செறிவினை ம[ன்ப]தை பைஞ்ஞில மாகவுஞ் செப்புவரே. 47

132. புரங்கடஞ் சட்டகந் தாபரங் காத்திரம் பூட்சியங்கங்
குரம்பை யுறுப்பாக மாக்கை மெய்[யாதாரங்] கூடுருவம்
பரந்தனு மூர்த்தங் களேபரங் காயம் படிவம்பிண்டம்
உரங்கொள் வடிவ முடல்தேக மேனி யுடம்பென்பரே. 48

133. உடற்கு[றை] யட்டை கவந்தமும் யூபமு மாங்குணுங்கு
கடப்படு கின்ற வழனுஞ் சவமுங் களேபரமும்
அடக்குங் குணபமு மாகும் பிணமினி யாய்பதந்தாள்
நடக்குங் கழல்கால் சரணடி பாதமு நன்னுதலே. 49

134. நற்கீற் பரடு கரடாகுஞ் சானு நவில்முழந்தாள்
சொற்பாய வாமமூ ருக்கந் துடையுருச் சோகங்கவான்
பொற்பார் குறங்கு நிதம்பங் கடிதடம் போற்றுமல்குல்
கற்பால் மருங்குல் நுசுப்பு நடுவிடை காரிகையே. 50

135. காணு முதரஞ் சடரம் வயின்மடி துத்தங்குக்கி
பூணும் வயிறுந்தி நாபி மிதலைகொப் பூழிலஞ்சி
நாணும் பொகிலு மெனுமார் பகல நவிர்மருங்கு
கேணிக ரில்லா வுரமாக மென்று கிளத்தினரே. 51

136. கிளருங் குரூஉக்கணஞ் சொற்கங் குயங்கொங்கை கேடில்தனம்
வளரும் பயோதர மம்ம நகில்முலை மாதர்க்கென்பர்
அளவில் சுணங்கு பொறிதித்தி யுத்தி திதலையுடன்
தளர்கின்ற வந்திகை தேமல் வரிதுத்[தி] சாலவையே. 52

**129.** 14 யூபத்; 18 பாணி; 19 யதிகம். **130.** 5 வரிதன் மற்றும்; 14 டுண்டல; 17 ...தம். **132.** 1 புரங்கனஞ். **133.** 2 மட்டை. **135.** 3 சடாநம்; 20 கிளர்த்தினரே.

137. வைத்த புயமொய்ம்பு தோள்வாகு பாணி வலியவத்தங்
கைத்தலம் யாவுங் கரங்குடங் கையகங் கையங்கையாம்
வித்தக மான நகமுகி ரங்குலி மெல்விரலாஞ்
சுத்தம் புறம்வென் வெரினு முதுகென்று சொல்லுவரே. 53

138. சொல்லுஞ் சுவனுஞ் செகிலு நிகலமுந் தோள்மிசையாம்
புல்லிய கண்டங் கிரீப மிடறு புனைகந்தரம்
ஒல்லுங் களங்கழுத் தோது மெருத்தம் பிடர்த்தலைபின்
நல்ல கயிலுஞ் சிறுபுற மும்பிடர் நற்பிடியே. 54

139. பிறக்கும் பிறகும் புறமு ம[ப]ர[மு]ம் பின்புமுகம்
நிறக்கும் வதனமு மானன மும்மென்பர் நீடுமுத்தந்
துறக்கு மிதழோட்டம் பாலிகை யாகு மதரந்துண்[ட]ம்
குறி[க்]கொண்ட நாசி க[ே]பாலங் கவுளுங் கொடிறென்பரே. 55

140. பல்லெயி றேதட்டந் தந்தம் முறுவல் பயில்நகை[ே]ய
நல்ல முறுவலு மூரலு மாகும் நகைதனக்கும்
புல்லு மணரியா மண்ண மணராகுங் கீழ்வாய்ப்புறஞ்
சொல்லிய வண்ணமுண் ணுத்தா[ல]ந் தாலு[ந]ாச் சொன்னயந்தே.

141. நயனம் விலோசன நாட்டம் விழிநோக்கஞ் சக்கம்பகம்
பயம்வரு நேத்திரந் தாரைகண் கோப்பார்வை பாலநெற்றி
இயலளி கங்குள மத்தக முண்ட மிலாடநுதல்
பெயரும் புருவம் புரூர நுதல்நற் பிருகுடியே. 57

142. குடிகொண்ட கன்னஞ் செவிகாது சேகரங் கூறுமுச்சி
முடிசென்னி யுத்தமாங் கஞ்சிர[ங் கம்] நவி ரந்தலையாங்
குடுமி நவிர்பங்கி பித்தை புனைசிகை குஞ்சிதொங்கல்
மடியுஞ் சுரியலோ டோரியு மைந்தர் மயிரென்பரே. 58

143. மயிர்வண்ண மாதர்க்குக் கூந்த லளக மராட்டமைம்பால்
பயில்கின்ற கூழை குழல்கொந் தளம்பரி சார்கதுப்புத்
துயல்கின்ற கோதை குரலோதி கேசஞ் சுரியல்சுருள்
செயிர்தங்கு ரோமஞ் சிரோத்த முடம்பிற் செறிமயிரே. 59

144. மருவளகங்கொந் தளமே விலோத மயிர்க்குழற்சி
தருபின் னகம்பந்த முச்சி முடிகொண்டை தாழ்சுடிகை

137. 17 புறம்பென். 138. 4 நிவலமுந். 141. 4-5 வழிகோக்கஞ் சாகம்பகம். 142. 17 சுரியமொ. 143. 11 துயிர்கின்ற.

வருகுழ லோடு சிகழிகை யாவு மயிர்முடியாம்
விரிசடி லம்பின்னல் கோடீரம் வேணி மிகுசடையே. 60

145. சடங்கொண்ட கத்துங் கொளுத்துங் கழுத்துஞ்சந் தாமிறையே
இடங்கொள் பிறங்கெனல் சேக்கையு மங்கித முந்தழும்பாந்
தொடங்கு மரலை கழலை சிரைநாடி சூழ்நரம்பாம்
விடங்கொ ளெலும்பத்தி யென்பாங் கபாலமும் வெண்டலையே. 61

146. வெற்றட லென்புகங் காளங் குடுமி விரும்புசிக்கந்
தெற்றிய சூளி சுடிகை சிமையஞ் சிகைசிமிலி
முற்று நவிர்முடி முச்சியாங் காத்திர மூண்டசினை
மற்று மவையவ மங்க முறுப்பென்பர் வாய்ந்தவரே. 62

147. வாரிய கேள்வி மறையவர் வேந்தன் வடகலைதேர்
ஆரிய நாடன் தமிழ்நாடன் தேவை யதிபனென்னும்
ஓரியல் பான குணத்தான் கெயாதரத் துள்ளமைத்தான்
பேரியல் பாலொரு மூன்று வதுமக்கட் பேரியலே. 63

மூன்றாவது மக்கட் பெயரியல்

முற்றும்.

144 16 விரிசெடி. **145.** 8 செய்கையு. **147.** 14 கெயாகரத்.

நான்காவது

## விலங்கின் பெயரியல்

148. இயல்மிரு காபதி யாளி மடங்கல்கண் டீரவத்தோ
டயரு மறுகரி [கேசரி] சீயம்பஞ் சானனமே
வயமிகு மாவயப் போத்துந காயுதம் வாள்வரிமா
உய[ரு] முடங்குளை கோளரி சிங்கமென் றோர்ந்துகொள்ளே. 1

149. கொல்லும் வயவரி தீவிசார்த் தூலங் கொடுவரியே
வல்லியஞ் சித்திர காயம்வி யாக்கிரம் வாழ்வயமாப்
புல்லு மிருகாரி வேங்கை யுழுவையும் புண்டரிகம்
அல்கு மறுகு புழைக்கையும் யானையு மாளியென்னே. 2

150. யானை கடிவை புகர்முகந் தோல்கும்பி யும்பலிபம்
ஆன கரியுவாப் போதகஞ் சிந்துர மத்திகளி
றேனைமா தங்கங் கருணிநால் வாய்கய மே[ய்]ந்ததும்பி
தானமாக் குஞ்சர மாதிரம் வேழந்தம் பேர[ாகு]மே. 3

151. பேரு மதமலை தந்தா வளந்தூங்கல் பின்புழைக்கை
வாரணஞ் சாமோற் பவமே யிரதி மலைவிலங்கு
பாரிய நாகீ மேறும்பி வழுவை பகடொருத்தல்
சாருங் களபம் வயமாக் கறையடி தந்திசெப்பே. 4

152. செப்பு நதத்துக் கிரிவனத் தோடு திரிசரமும்
வைப்பர் பிறப்பு மதகரிக் கென்று மதங்கரடம்
பொய்ப்பில் கடங்கடாந் தானந் துடியடி போதகமே
தப்பில் களபங் கயமுனி கன்றுந் தனிக்குயிலே. 5

153. குரகதம் வாசி யிவுளி சயிந்தவங் கோடகமாத்
துரகங் கனவட்டம் பாடலங் கற்கி துரங்கங்கிள்ளை
பரியய முந்தூசி யச்சுவம் வாகம் பகர்கந்துகம்
அரிகுந்தங் கந்திரு வம்மத் திரியுங் குதிரையன்றே. 6

154. அன்றுங் குடஞ்சுட்டொ டான்பசுப் பெற்றங்கோ வாப்பொதுப்
துன்றுஞ் சுரபி கபிலை சுரைதேனுக் கோமளமும் [பேர்

**149.** 12 மிருள்காரி. **150.** 20 பேரமமே. **151.** 2 மறமறி; 3-4 தூங்கல்தந் தாவளம். **152.** 2 மருத்துக்; 6 வைப்பாம்; 8 மத்தக்கரிக். **153.** 10 துரகங்கிள்ளை; 12 முத்தரி; 16 அரிகுந்து. **154.** 6 (த்)தொன்றுஞ்.

பொன்றும்பெண் பால்சே விடைபூணி மூரி யிடபம்புல்லம்
என்று மிருல் பாண்டில் கோபதி புங்கவ மேறெருதே. 7

155. எருமைகா ரான்மேதி காரச மேம யிடங்கவரி
வருமத ஞமம் பகடு கடாவா மலடுமைம்மை
துருவை பிரமங் கொறியச மைதுருச் செம்மறியாங்
தருவ ரிதஞண் கடாவே மூகமேழ கந்தகவே. 8

156. தக்க வுதள்செச்சை மோத்தைவெள் ளேற்றை தருமறியே
மிக்க புருவை சகஞ்சா களஞ்சாகம் வெள்ளைகொச்சை
வற்காலி வெள்ளாடு மானமாப் பட்ட மெகினமன்னம்
வைக்க கவரி கவையமா மாக்கான மாவென்கவே. 9

157. கத்தபம் வேசரி கோகுவா லேபங் கழுதைகரம்
அத்திரி கேழ லரிகிடி கோலம்பூ தாரமைம்மா
வைத்த கிருட்டி குரோட்டே யெறுழி வராகம்பன்றி
சுத்தங் கனலி களிறேனம் போத்திரி சூகரமே. 10

158. சூழ்வரை யாடு சரபம் வருடையெய்ப் பன்றியெய்யே
வாழு முளவுமாச் சல்லியம் நவ்வி மறியருணம்
தாழும் பிணையுழை யேணங் குரங்கஞ்சா ரங்கமுமான்
யாழின் மொழியா யிரலைபுல் வாய்கலை யேறென்கவே. 11

159. ஏறிய பல்ல முளியம்வல் லூகங் கரடியெண்காம்
கூறுள்ளன் சம்பு நரிபூரி காயன்கோ மாயுவொண்டன்
சூறுங் குரோட்டா விகலன்தா சோக மிரவணத்தோ
டேறுங் கரபமு மொட்டக மாகு மொளிவளையே. 12

160. ஒளிர்பூசை பூச்சை விடருகம் பாக்க ஞயர்பவனங்
களிதரு மாற்சாரம் பூனை விலாளங் கடுவன்வெரு
களிதரு மேறென்ப ராவிதங் கானக் குதிரைமரை
நளிவய முஞ்சச மும்முயல் கீரி நகுலமற்றே. 13

161. மறுவறு நான நரந்தங்கத் தூரி மறிதுருக்கம்
பெறுமற் கடங்கவி வானரங் கீசம் பிலவங்கமாங்

**155**. 9 கிடாயா; 18 கிடாயே. **156**. 10 வெள்ளையசங் கொச்சை; 19 மாக்காள. **157**. 8 லரிகீடங், லரிகீடம்; 9-10 கோலம்பு தாரமபணணனறி; 13 கருமா. **158**. 6 தாழு; 7 முழவுயிர்ச்; 11 வாழும். **159**. 6-10 கூறு நரிசம்புப் பூரிகாயமுள்ள கோமாயுவே. **160**. 3 விருடகம்; 5 ஞயர்பவணங்; 13 ராவிகங்; 16 நளிபல; 20 நகுலமன்றே, நகுலன் மற்றே. **161**. 1-10 மறிவிலா நன்ஞவி கத்தூரி மானரந்தங் துருக்கம்-மறிமடறகடகஙகவிவானரலஙகீசம பிலவங்கம்;

குறுகு பிலவகஞ் சாகா மிருக மரிகோகில
மறுகு நிரந்தர மூகங் குரங்கு வலிமுகமே. 14

**162.** வரியபெண் பாலவா மந்தியு மூகமு மற்றவற்றுட்
கரிய குரங்கூகம் காரு மதற்குக் கலைகளவன்
சுரிகொள் முசுக்கோலாங் கூலமா ஞாளி சுணங்கன்சுவாச்
சரியு ஞமலி யெகினஞ்சூ ரன்சார மேயமுமே. 15

**163.** மேய முடுவல் சுணங்கனுங் குக்கனும் வேண்டுமுடும்
பாய முசலிகை கோதாவாங் கோம்பி யரிய தண்டோ
டேய்சர டங்காம ரூபி முசலி யெழிலோந்தியாங்
தூயமூஞ் சூறுநற் சுந்தரி சுண்டனுஞ் சூறனுமே. 16

**164.** சூறுஞ் சிகரி யெலியாகு மூடிகந் தொல்விருடம்
வேறு மிரும்பன் கருப்பை கரியே யணில்வெளிலாம்
மாறில் விலங்கின் பொதுப்பெயர் மாவுடன் மானுமென்பர்
ஏறு மொருத்தல்போத் தேற்றையே ருண்பால வென்றனரே. 17

**165.** என்றும் பெடைபெட்டை நாகு பிணாப்பிணை யென்பபெண்பாற்
கொன்றுங் குருளை பறழ்குட்டி பார்ப்பு மறியுடனே
கன்றுங் குழவி மழவு மிவைபிள்ளை சாலிநிரை
துன்றுந் தொறுத்திறம் வால்வா லதிகூலந் தோகையென்னே. 18

**166.** தோன்றிய வாற்கீழ் வெருகமஞ் சாகு முதுகுதும்பிக்
கான்ற செவிகன்ன தாலம்வால் தாலவட் டஞ்செருத்தல்
ஏன்ற சுரைமுலை யானை குதிரை யிவையுமிழ்நீர்
கான்ற விலாழி யிமிலேற்றின் மேற்றிரள் காண்முரிப்பே. 19

**167.** காட்டிய சாலம் விருந்தம் வியூகங் கணங்குலமே
கூட்டங் குழுத்திரள் யூதமெப் பாற்குமாங் கோடுமருப்
பீட்டு முலவைகொம் பென்பர் துவக்கத ளோடுரிவை
சூட்டு முரிகத்தி மந்தோல் வடகந் திருத்தியென்னே. 20

**168.** திரியவும் பச்சை புறணி சருமமுஞ் செப்புஞ்செந்நீர்
எருவை சுடுவன் கறைசோரி புண்ணீ ரிரத்தநெய்த்தோர்

**161.** 16-17 மறுகிய கோடர. **162.** 8 காணு. **163.** 2 முடுவன்; 10 திண்டோ; 15 யெழிலோத்தியாங். **164.** 2 சிகிரி; 5 தொல்விருடம், தொல்விடரும்; 9 கரிய; 15 மானுமென்க; 19 ருண்பால்சே; 20 வென்றுரையே. **165.** 3-4 நாகாபிணாப்பிண (வெ). **166.** 3 எருக்கமஞ்; 10 டஞ்செருத்தம்; 18 திமிலேற்ருண். **167.** 4 வியூதங்; 12-13 முலவை கொப்பென்ப; 17 முரிகிர்த்தி; 19 துடக்கந். **168.** 3 புணரி; 20 யுண்பூழ்தியே.

குருதியொ டாமு முதிர நிணநேயங் கூறிமுதும்
உரிய விழுக்காம் புலவு முடையூழ்த்தி யூன்பூழ்தியே. 21

169. பூவில்வள் ளூரம் பிசிதம் புறணி புலால்புலவு
தூவு தடிதசை யூன்விடக் காங்கருச் சூல்சினைபீள்
மேவு மராள மரவு புயங்கம் வியாளமராப்
பாவு விடதரங் காத்திரங் காகோ தரம்பணியே. 22

170. பன்னக மங்கதம் போகி புயங்கமாம் பாந்தளகி
மன்னுங்கும் பீனசங் கூட பதஞ்சர்ப்ப மாசுணத்தோ
டுன்னிய கட்செவி கஞ்சுகி நாக முரகமரி
துன்னிய சக்கிரி வாதா சனந்தந்த சூகமுமே. 23

171. சூலிய தந்தமு நான்கு கவைநாத் துளைச்செவிகண்
வாலிய துத்தியொ டுத்தி படப்பொறி மாகரளம்
நீலங் கடுவிட மாலால்ங் காள நிகரில்கரம்
ஆலமுங் காரியு நஞ்சாங் கலுழ னரியூர்தியே. 24

172. ஊரும் வயினன் ககபதி நாகா சனனுவணன்
ஆருங் கருட னெருவை யுவணப்புள் ளாங்கழுகு
வாருண் டகஞ்சிம்புள் சாதக மேவானம் பாடியென்பர்
காரண்ட நீர்க்காக்கை போதாப் புதாநாரை கண்டுகொள்ளே. 25

173. கொள்ளுங் களகண்டங் கோகிலந் தானுங் குயில்சகமுங்
கிள்ளை யரிதத்தை வன்னியு மாகுங் கிளிசக்கரப்
புள்ளுட னேமியுங் கோ[க]முஞ் சக்கர வாகப்புள்ளாம்
துள்ளுங் கபோதநற் பாரா வதந்தூ துணம்புறவே. 26

174. புதியநற் குக்கில் சகோரஞ்செம் போத்து பொருசரணு
யுதமொடு குக்குடம் வாரணஞ் சேவ லுயர்கோழியாம்
இதல்பூழ் சிதல்கவு தாரி பகண்டை யிதல்சிவ்லாம்
சித்டி நெடிசில்லி சிள்வீடு சும்புள்சம் பங்கோழியே. 27

175. கோலும் வயவன் வயானன் வலியான் குரண்டங்கொக்கு
மேலும் வலாகம் பகமும்வண் டானநல் வெண்குருகுஞ்

**169**. 4 புருளி ; 10 சூல்கிளைபீள். **171**. 9 யுடப்பொறி ; 10 மாகாளமா ; 14-15 கால நிகரில் தட்டம். **172**. 14 மேவான ; 19 ய்தாநாரை, புதா வென்று. **173**. 3 கோகுலங் ; 6-7 கிள்ளையுந் தத்தையும் ; 13 கோதமுஞ், கோரமுஞ். **174**. 15 யிகல் சிவலாம் ; 17 நெடுஞ்சில்லி, நெடில் சில்லி ; 18 சில்வீடு. **175**. 2-4 வலியான் வயானன் வயவன் ; 3-4 வயான் வலியானென் ; 8 பெ...ரமவண் ; 9-10 டானமு மொண்குருகு ; 10 வெண்குருகு ; 13 நாகுண ; 14 வ்ான்பூவை, வான்பூசை ; 15 கயமதென்னே.

சாலும் பெருநாரை நாகண வாய்பூவை சாரிகையாங்
காலுங் கயவாய் வலியான் குருவி கரியதென்னே. 28

176. கருமகள் காரி கொடிவாய சங்காகங் கார்க்கரடம்
வெருவிய காடை குறம்பூழ் சிரல்மீ னெறிபறவை
பெருகிய வோதிம மன்ன மெகினம் பிணிமுகமூர்க்
குருவி சடகம் வியங்கங்கஞ் சேனமுங் கூன்பருந்தே. 29

177. கூகை குடிஞை குரால்கோட்டான் மஞ்ஞை சிகண்டிசிகி
தோகை மயூரம் பிணிமுக மேகாரஞ் சொல்லுமயில்
கேகயங் கூந்த லிறகு கலாபங்கேழ் கூழைதொங்கல்
தோகையும் பீலி முருந்ததன் முள்ளாந் துடியிடையே. 30

178. இடையு மிருடிகூன் பிங்கலை கின்னரி யாந்தையென்பர்
விடையில சாரசம் புட்கரம் வெண்குரு.காகும்வெய்ய
கடைபயி லன்றில் கிரிஞ்சங்கி ரங்கிள்ளை காரியென்றும்
புடைகசம் போகில் சகுனம் பிணிமுகம் புட்பொதுவே. 31

179. பொதுளிய தும்பி பிரசம் பிரமரம் புள்ளறுகால்
மதுகரங் கேசர மார்பதங் தேனீ வரிக்கடைமாக்
கதுவிய சூதகஞ் சாரங்கம் வண்டு கழுதுசுரும்
பிதவிய கீதம் அரியளி யேஞிமி றென்றிசையே. 32

180. இசையும் பதங்கஞ் சலபமும் விட்டி லெழாலொடுபோத்
தசையு மயில்பெறு மல்லாத புட்களாண் பால்சேவலாம்
வசையில் பெடைபெட்டை பெண்பால கோழி வருகுடிஞை
நசையி லிரண்டொழித் தியாவும்பெண் பாலள கென்பர்நன்கே. 33

181. நன்றுய பிள்ளையும் பார்ப்பும் பறவையி னல்லிளமை
ஒன்றுஞ் சினையுட னண்டமு முட்டை யுயர்ந்ததுண்டஞ்
சென்றுய மூக்கு மிதன்வா யலகு சிறைகுரலோ
டின்றுய கூழை பறைதூவி பிஞ்ச மிறகென்பரே. 34

182. படங்கொள் துழனி பலபுள் ளொலிக்கூட்டம் பார்க்கில்வன்மீன்
இடங்கர் கராவு முதலை மகரஞ் சுறுவிறவே

**176**. 1 கருமுகில்; 17 சகடம், சடங்கம்; 18-19 விகங்கங்கஞ் சேனம். **177**. 8 பணிமுக; 11-15 கேகய மாங்கூழை கூந்தல் சிறகு கலாபந்தொங்கல். **178**. 6 விடைமயில்; 11 கடைபய; 13 க்றவுஞ்சங்கி. **179**. 6-7 மதுரசஞ் சேகர; 16 புதவிய; 19 தேன்ஞிமி. **180**. 2 பதகஞ்; 3 சலசமும்; 6 தசையில்; 20 கல்லள் நன்கே. **181**. 13 மிதன்றா; 16 டொன்றுய. **182**. 18 சராசா.

தடங்கொ ளிருல்மீன மச்சஞ் சகுலி வகுலியுடன்
அடங்கு மயிலை சலசர மீனென் றறைவர்களே. 35

183. அறைகின்ற நூறை மலங்கு கெடிறு கெளிறனந்தம்
பறைகின்ற மீன்பேர் வழக்கினுட் காண்க பணிலம்வளை
குறையொன்றில் வாரணஞ் சங்கு சலஞ்சலங் கோடுநத்து
மறைகின்ற நாகு சுரிமுகங் கம்பு வலம்புரியே. 36

184. புரியு மெருந்திற லேரல் கருநந்து நாகுபொற்பிற்
சுரிமுக நத்தை மரைதேரை நீகந் தவளைசொல்லில்
அரியிவை மண்டூகங் கச்சபங் கூர்மங் கமடமஞ்சீத்
திரிதரு மாமை தெறுக்கால் விரிச்சிகந் தேளதென்னே. 37

185. தெள்ளு முலுதை சிலம்பி சிலந்தி சிதலைசெல்லோ
டள்ளுறு மாழல் கறையான் குளிர்நண் டலவனுடன்
நள்ளி களவனுங் கற்கட க[ம்மு]சு நல்லுளுவாம்
நொள்ளையு நாகர வண்டா முறவியு நுண்ணெறும்பே. 38

186. எள்ளும் பிபீலிகை கீடங் கிருமி யிவைபுழுவாங்
கொள்ளும் பிரசமுங் கோற்றே னிருலதன் கூடதென்பர்
கள்ளு நறவ நறுமது மட்டுக் களிபிரசந்
தெள்ளு மகரந்தங் கொங்குதேன் வேரியுந் தீட்டினரே. 39

187. தீட்டு மறைபயில் நாவின னென்றுஞ் செழுந்தமிழ்நூல்
கேட்ட செவியினன் கேளா வறிவன் கெயாதரத்துள்
ஈட்டிய சொற்பொரு ளெல்லாந் தொகுத்தீ ரிரண்டாவது
காட்டிய தொல்லை விலங்கின் பெயரியல் கண்டுகொள்ளே. 40

நாலாவது விலங்கின் பெயரியல்
**முற்றும்.**

**183.** 13 (ங்)கம்பு; 19 (ஞ்)சங்கு. **184.** 11 அரியியை; 20 தேளென் பரே. **185.** 2 முலதை, மிலுத்தை; 11-12 நள்ளியுங் கள்வனுங்; 14 கஞ்சுவா. **186.** 2 பிபீலிகங்; 5 யிவையுளுவாக்; 10 கூடதென்க; 11-12 அள்ளு நறவு. **187.** 15 ரிரண்டாவதாக்; 18-19 விலங்கின்றன் பேரியல்.

ஐந்தாவது

## மரப் பெயரியல்

188. கொந்தாருஞ் சந்தானந் தேவதா ரம்பாரி சாதங்குன்று
மந்தாரங் கற்பக மாகுமைந் தாரு மலையஞ்சந்தஞ்
சந்தாரஞ் சாந்தம் படீரமா ரஞ்சந் திரதிலதம்
அந்தாருப் பூழி லகில்காக துண்ட மகருவுமே. 1

189. கருதும் பணைபோதி யச்சுவத் தம்பிப் பலங்கணவம்
அரசு மராமர மாகுந் திருமர மால்வடந்தொன்
மரமே பழுமரங் காமரங் கோளிமென் பூதவமாம்
மருதா மருச்சுனம்வா னீரம் வஞ்சுளம் வஞ்சியென்னே. 2

190. வஞ்சமில் சண்பகஞ் செண்பகஞ் சால மராமரமா
எஞ்சலி லாக்சா வகுள மிலஞ்சி மகிழிரத்தி
விஞ்சு மிறலி திமிசு கணிவேங்கை வெள்ளில்விளாப்
பஞ்சரத் தோடுசெங் கோடு செருந்தியென் பான்மொழியே. 3

191. பாடலம் பாதிரி காஞ்சுரை யெட்டி பனசம்பலாக்
கூடிண ராங்கன்னி காரமுங் கோங்குகுங் தங்குருந்தம்
காடுசெய் பிண்டி யசோகு செயலைகா கோளியுமஞ்
சாடி திலகம் பசும்பிடி பச்சை தமாலமென்னே. 4

192. மாதளை மாதுளங் கங்கமு முட்சுர புன்னைவழை
தாதிம மாந்தாதி மாதளை சம்ப முருகெலுமிச்
சோது நரந்தநா ரத்த முடங்கல் மடிகண்டலே
கேதகை கைதையுந் தாழை கவிர்கிஞ் சுகமுருக்கே. 5

193. முருகுலா வச்ச மகத்தி புழகு புனமுருங்கை
குருகு குருக்கத்தி மாதவி கூம்பல் கூடம்பல்குமிழ்
அரிதகி யாகுங் கடுநெல்லி யாமல கம்புளிதிங்
துருணி யெகினமொ டாம்பிலஞ் சிந்தஞ்சிந் தூரமுமே. 6

**188.** 1 கொந்தாகுஞ் ; 10 மலைவிசத்திற் ; 11 சந்தானஞ் ; 12-14 சந்தனஞ் சாந்தமு மாஞ்சந் ; 16 ஐந்தாருப். **189.** 5 பிலங்கணவம் ; 14-15 கோளிமன் பூவாமரம் ; 15 பூதங்கமாம், பூதமரம். **190.** 5 மராமரமாம் ; 10 யகுழிரத்தி. **191.** 4 பெட்பின் ; 6 காமின ; 10 தங்குருந்தாம் ; 15 கோகுளிமஞ் ; 17 திலதம். **192.** 3 கங்கடு ; 6-7 தாதிமந் தாதியு ; 10 முருக்கெலுமிச். **193.** 1 முருகிலா ; 16 திருணி ; 18 டாம்பிரஞ் ; 19-20 சிந்தநற் சிந்தூரமே.

194. சிந்தைசெய் விண்டல் கிளைவேணு வேரல் திகிரிகழை
சந்தி பணைபாண்டில் கீசக மோங்கல்வேய் தட்டைவரை
முந்தூழ் வெதிர்காம்பு தூம்பமை வேழ முளைதிரிகண்
கந்தி நறும்பாகு பூகதம் பூகம் கமுகொடைந்தே. 7

195. கன்னல் கழைவேழ மிக்குத் தருநற் கரும்புபுன்னை
புன்னாகஞ் சன்மலி பொங்க ரிலவாங் களாக்களவாம்
பன்னல்காற் பாசம் பருத்திபுற் றாளி பனைபெண்ணைபோந்
துன்னிய நீலங் கருந்தா ளுடன்றால மோதினரே. 8

196. ஓதிய வாசினி யீரப் பலாவர் முடைகுடைவேல்
தாதகி யாராகு மாத்தி கதிரங் கருங்காலிதான்
சூத மரஞ்சே கரமாழை மாவாம்பிரஞ் சொல்விற்கொக்காஞ்
சாதி பிரம்பு வெதிர முடன்சூரல் தப்பில்லையே. 9

197. இல்லிலந் தேறு மிரத்தி யிலந்தை யிதழிகொன்றை
சொல்லிய தாமங் கடுக்கைசா கஞ்சாதி தேக்கதென்பர்
வில்லுவ மாலூரங் கூவிள மங்கோல மேயழிஞ்சில்
புல்லிய செம்மர மாகுந் நுணவு[ம்] புனைதணக்கே. 10

198. புனைதரு நீபங் கதம்பங் கடம்பாம் புகல்கதலி
வனையு மரம்பையும் வாழை கலிகமும் வன்னிசமி
இனையு முதும்பர மத்தி யருக்க மெருக்குநிம்பம்
நனைமலர் வேம்பு துடியேலஞ் சம்புவும் நாவலென்னே. 11

199. நாகமாஞ் சுள்ளி நறவமு ஞாழலே நன்மரவம்
ஆகுந் துருக்கமுங் குங்கும மேரண்ட மாமணக்குத்
தாகங் கெடுநாளி கேரந் தடந்தெங்கு தாழையென்பர்
போகிய காயாவே காசையு மால்வண்ணப் பூவையுமே. 12

200. வைத்தநற் றுன்றி கலித்துரு மம்மல ரின்றிநற்காய்
தொத்திய பாதவங் கோடரி கணிசெண் பகந்தொடர்ந்து
மொய்த்துவண் டுண்ணு மாஞ்சாகி பாதவ மூலந்தருத்
தத்து மரமத் திரிசாலம் பூருகந் தாபரமே. 13

**194**. 1-2 சிந்தை விண்டாம்பல்; 5 திகிரிகணை; 6 சந்தில்; 18 பூககம். **195**. 10 களாக்களமாம். **196**. 12 மாச்சே; 18 வேத்திர; 20 தம்பில்லையே. **197**. 7 நாமங்; 15 மேயழுஞ்சில்; 18-19 மும்மாந் துணைவு; 19 துணர்வு. **198**. 7 மரம்பைநல்; 9 சலிகுஞ்சம்; 9-11 கலிக்குஞ்சி வன்னியத வுனையு; 16 கனைதிகழ். **199**. 4 ஞாழலு; 17-20 காயா வுடன்காசை மால்வண்ணப் பூவையென்னே. **200**.5 ரன்றிநற்காய்; 13 மலர்சர்தி; 16-17 தத்துருவம்மத்.

201. பரந்த தருக்குழா முய்யானந் தண்டலை பைம்பொழில்காத்
துரந்துத்தி யானமொ டாராமங் கானலுஞ் சோலையென்பர்
புரந்த பொதும்பராங் கோட்டரம் பொங்கர் மரச்செறிவு
நிரந்த வரண மிளைகாவற் காடென்று நேர்ந்தனரே. 14

202. நேர்ந்த பழுவங் கடம்வியல் கட்சி நெடுங்ககனம்
காந்தாரங் கானனங் கான மடவி கடறுபொச்சை
சேர்ந்த முளரி களரி குறும்பொறை தில்லம்விடர்
காய்ந்த வனங்காண்ட மாரணி யஞ்சுரங் காடென்கவே. 15

203. கண்டக மேக்கிடு முள்ளா மரில்தூறு காணிறும்பு
முண்டக முள்ளுடை மூல மரிகலை மொய்வயிரங்
கொண்டகா ழாசினி சேகு மரக்காழ்ப்புக் கொவ்வைவிம்பந்
தொண்டை சிறுகீரை சாகினி சில்லியுஞ் சொல்பரிந்தே. 16

204. பரவிய கோட்டங் குடிலங் குரவம் பலாசதனைப்
பிரம தருவென்ப கோவிதா ரங்குராப் பின்னலரி
கரவீரத் தோடு கணவீர நந்தியா வத்தம்வலம்
புரியென லாகுங் கொரண்டங் குறிஞ்சி புரிகுழலே. 17

205. புரியிலை பூழ்த்த முதுகாடு மூதை பிறங்கியமாம்
சுரமொடு பொச்சை கொடுங்கரிக் காடு துணைபணைகோ
டரமொடு பொங்கர் சினைகோடு கொம்புறுப் பார்பிறக்கந்
தருவிட பங்காம் புலவைகப் புக்கொப்புச் சாகையென்னே. 18

206. சாற்றிய பத்திரம் பன்னந் தமாலம் தழைதளமோ
டேற்று பலாசஞ் சதனஞ் சதமடை யென்பரிலை
மாற்றுந் தளிர்கிளை வல்லரி யேமுறி மஞ்சரியோ
டாற்றுங் கிசலயம் பல்லவ நல்ல வலங்கலுமே. 19

207. கலித்த விலிர்த்தல் குழைத்தல் தளிர்த்தல் தழைத்தலென்ப
வலித்த முருந்ததன் வெண்குருத் தாமஞ் சரியிணரே
பலித்த துணர்தொத்துக் கொத்துக் குலைவல் லரிபல்லவங்
குலித்த திவளிகா யென்ப பழங்கனி கொள்குயிலே. 20

**201**. 12 பொதும்பாகும். **202**. 7 கானகங்; 14 குறும்பொறல்; 17 வனங்கண்ட; 20 காடென்பரே. **203**. 4-5 மரில்சிறு தூறிறும்பு; 9 மரில்கலை; 12 ழாசினை. **204**. 4 குடவாம்; 5 பலாசந்தன்னை; 19 குறஞ்சி. **205**. 1-2 புரிவிலை பூழ்த்தி; 5 புறங்கியமாம்; 10 துனைபணைகோ; 12 கொம்பர்; 14 கொப்புறுப்; 19 புக்கொம்புச். **206**. 5 தழைதலமோ; 6 டேற்றும். **207**. 2 விரித்தல்; 8 வெண்குருந்; 12-15 துணர்கொத்துத் தாறு குலைவல் லரி பல்லவங்; 17 தியளிகா; 19-20 கனிபழ மென்குவரே.

208. குல்லை துளவந் துழாய்காந்தள் வெண்டோன்றி கோடல்ப[ற்]றை
செல்லு முழிஞை சிறுபூளை யெண்ணுந் திலமுமெள்ளாம்
நல்லவுன் மத்தக மூமத்தை நாடுங் கறிமரிசம்
மல்லல் மிளகா மரிசன மஞ்ச ளரித்திரமே. 21

209. அஞ்சலி திப்பிலி மாகதி யட்டி மதுமதுகம்
இஞ்சியே யாத்திர கம்மா மிருப்பை மதூகமென்க
எஞ்சிய சொன்னலுஞ் சோளமு மாகு மிறுங்கிறடி
விஞ்சு கருந்தினை யேனலுஞ் செந்தினை மெல்லியலே. 22

210. மெல்லிளங் கொம்பர் வளாரா முலவை தழைபயிர்கூழ்
நெல்லுநற் சாலி விரீகி குளநெல்லு நீவாரமாம்
ஐவனஞ் சாரல் விளைநெல் லிருவி யருவிபுன்றுள்
கவ்வையு மெள்ளிளங் காயாங் குரலாங் கதிர்வல்லியே. 23

211. வல்லி யிலதை கொடிநூ லிரத்தியும் வள்ளியுமாம்
மல்லிகை யாகும் விசகலி மௌவலு மாலதியாம்
முல்லை தளவஞ் சிறுசெண்ப கஞ்சாதி பித்திகையே
நல்ல கருமுகை யாமிரு வாட்சி மயிலைநன்கே. 24

212. நன்காம் பதுக்கை யரில்சிறு தூறு நவில்காஞ்சனம்
புன்காந் தகரந் த[மால]மிண் டீங்கை கழல்மூழலாம்
மன்கார்க் கடுகு கடிப்பகை மையவி வாய்ந்தவள்ளை
என்கால்கொள் நாளிகந் தன்னைச் சகுடஞ்சேம் பென்றிசையே. 25

213. சைவல நாரஞ்செவ் வீரம்பீ னம்பாசி தான்பதிகம்
வவ்வும் வழுதுணை வங்கம் பிருகதி வங்கணமாம்
எவ்வமில் காஞ்சொறி கண்டூரஞ் சாய்ப்புல் லெருவைகுசை
செவ்விய தெர்ப்பை செருந்திவாட் கோரை திருந்திழையே. 26

214. திருந்திய முண்டக மாமுள்ளி செச்சைசிந் தூரம்வெட்சி
மருந்தென்பர் புல்லு மரமுதல் யாவும் வருபகன்றை

**208.** 4 வெந்தோன்றி ; 5 கோடல்பறை ; 8 சிறுபூழை ; 13 முன்மத்தை, முன்மத்த. **209.** 2 திப்பலி ; 8 கங்க ; 15 மிறுங்கிகுடி. **210.** 3 வணரா ; 5 குழைபயிர்கூழ் ; 15 யருவிபுற்றுள் ; 16 கௌவையு ; 18-19 காய்குரலாகும். **211.** 3-4 கொடிநூழில விருத்தி ; 12 தாாவஞ் ; 15 பித்திகையும் ; 19 வாச்சி. **212.** 7-10 தகரந்த மிண்டீகை மூழல் கழங்குகழல், தகரங் கமுமிண்டீங்கை கழல் மூழலாம் ; 11 மன்காற். **213.** 2 நாரஞ்செ. **214.** 13-15 பையாங் கற்றுழை குமரிபொற்பார் ; 17 ரினைகந்தை.

பொருந்து கிலுகிலுப் பையாங் குமரிகற் றாழைபொற்பார்
பருங்க ருணைகந்தம் வையழி வைக்கோல் பலாலம்பன்னே. 27

215. பதடி பதர்பொங் கழிதூற்று நெற்பொலி பாகலென்றுந்
துதவிப கூலஞ் சிவேதை பகன்றைசோ பாலிகையே
உதவு மடம்பா மமுதவல் லிசீந்தி லோங்குசடை
கதுவிய மூலங் கிழங்குதூர் வேர்சிவை கந்தமென்னே. 28

216. கருந்துடி கூதாளங் கூதாளி கல்லகா ரங்குளிரி
பரிந்தல ரும்பீரம் பீர்க்காகுந் தாளியும் பஞ்சிகமாம்
அருந்து முந்திரை யவரை துவரை முதலானவாம்
பொருந்திய காசையு நாணலே டுங்தோடும் பூவிதழே. 29

217. இதழ்புனை முண்டக மம்போரு கம்புண்ட ரீகமிண்டை
சதபத் திரியம் புயமர விந்தஞ் சரோருகமொண்
பதுமந் திருமலர் கோகன கம்பங் கயநளினம்
முதுவன சங்கஞ்சம் வாரிசம் பற்ம முளரியென்னே. 30

218. என்றுங் குவலைய நீலநீ லோற்பல மிந்தீவரங்
குன்றிய பானலுங் காவியு மாகுங் கருங்குவளை
நின்ற வரத்தமு முற்பல முஞ்செங் குவளைநெய்தல்
கன்றுங் குவலைய மல்லி குமுதங் கயிரவமே. 31

219. வல்ல பொகுட்டுப்பூங் கொட்டை யகவித ழல்லிமற்றும்
புல்லி புறவிதழ் கோரக மொட்டுப் புனைகலிகை
நல்ல முகுள முகிழ்முகை போகில் நனைகலிகம்
மெல்லெ னரும்பு சினைசா லிகைகண்ணி வேண்டுவரே. 32

220. வேண்டுந் துணரிணர் வீமலர் போது விரியலர்தார்
ஈண்டு மலரி யிவையவிழ் பூநெய் யரிநாரரி
தூண்டும்பன் னுடை படையிற் கொடையினற் சூதில்வென்றோர்
யாண்டும் புனைவது வாகையம் போரென் றியம்பினரே. 33

221. இயம்பிய செம்மல் பழம்பூ மகரந்தங் கொங்கொடென்றும்
அயந்தரு கேசரம் பூந்தா தணிய லலங்கல்கண்ணி

**215.** 4 நெற்கூடு; 6 துதைவிய; 9 பகன்றைசோர், பகன்றைசொற். **216.** 6-8 பரிந்தாரும் பீரம்பீர்க் காகுந்; 12 முதுரை; 13-14 துவரை யவரை. **217.** 7 திரமம்; 10 சரோருகமே; 18 வாரீசம். **218.** 1 என்று; 6 கன்றிய; 12-14 வரத்தக முற்பலஞ் செய்ய. **219.** 1 வல்லி; 10 புனை கணிகை; 12 முகிண. **220.** 3 வீயலர்; 17 புனைமலர்; 18-19 வாகையின்பேரென்; 20 றியம்பினனே. **221.** 2 செம்பல்; 6 பயந்தரு, அயாந்தரு; 9 ரணிய.

பெயர்ந்த தொடையல் தொடைதாமங் கோதை பிணையல்தொங்கல்
வயங்கு தெரிய லொலியல் தொடலைதார் மாலையென்னே. 34

222. மாலுஞ் சிகழிகை வாசிகை சூட்டோ டிலம்பநுதல்
மேலணி மாலை தொடலையுங் கண்ணியும் வேண்டுவர்முன்
னூலின் படிகண்டு காணு தவையு நுவன்றறிக
காலும் பரிமளக் கொங்கார் மலர்க்குழற் காரிகையே. 35

223. காசிப கோத்திரம் வாழவந் தோன்றென் கலைத்தமிழ்தேர்
மாசில் பெருந்தகை மாரு வறிவன் மலரயனுங்
கேசவ னும்புகழ் தேவைநன் னுடன் கயாதரத்துப்
பேசி யமைத்தன னைந்தா வதுமரப் பேரியலே. 36

ஐந்தாவது மரப்பெயரியல்
முற்றும்

222. 14 தனவு. 223. 13 தேவைய.

ஆறாவது

## பல்பொருட் பெயரியல்

224. இரணிய மாடக மாழைசாம் பூநத மீழஞ்சொன்னம்
பொருள்கன கம்பீதம் சாமீ கரஞ்சாத ரூபம்பொலம்
அரிநிதி காணந் தமனியங் காஞ்சன மாடருத்தந்
தருபொன் னிதியம் வெறுக்கை தனம்பூரி சந்திரமே. 1

225. திரவிய மேமந் தொடுக்க நிதானந் திகழாசைபொன்
வரைவியல் காசு மனவு மணியொன் பதுவகையாம்
அரதன நல்ல சிலாகை யகன்மணி யாரமுத்துத்
தாளமு நித்தில மாம்பற்மஞ் சங்கந் தருநிதியே. 2

226. நிதியும் பதினல் வகைகோசந் தண்டம்பண் டாரநிறை
பதுமரா கத்தொடு மாமணி மாணிக்க மாம்பவளந்
துதிதரு வித்துரு மந்துகிர் துப்புத் துவாரத்தம்
விதிகொ ளிரசதம் தாரங் களதவு தம்வெள்ளியே. 3

227. வெல்தருங் கஞ்சமும் வெண்கல மார்கூ டமும்பிரதி
சொல்லிய மாயா புரிபித் தளேவடு சுற்பஞ்செம்போ
டொல்லு முதும்பரந் தாம்பிரஞ் சீருண மோங்கிரும்பு
நல்ல கருந்தா தயமெஃகஞ் சத்திர நாடிற்பொன்னே. 4

228. நாகங்கா ரீயஞ்சீ ருள்சீச பத்திர நல்லவங்கம்
ஆகு மதுகந் தராப்படி கம்பளிங் காம்வயிரம்
ஏகிய வச்சிரஞ் சோம னிரவி யொளியிலென்றும்
பாகு படுவது சந்திர சூரிய காந்தம்பற்றே. 5

229. பருக்கைகாழ் தார மரும்பண்டம் வட்டி கவுடிபண்டம்
அருக்கிய கூலம் வளம்பண்ணி யம்பண்ணி காரமுமாம்
மருக்கொள்கர்ப் பூரம் பளிதங்கத் தூரியு மான்மதமே
தருக்கும் புலிபீதங் காலேகம் வட்டிகை சாந்தென்பரே. 6

**224.** 11 அருநிதி; 17 னிதியும், விருத்தி. **225.** 3 தொடுக்கை; 5 திக மாசை பொன்; 6 விரவிய; 17-19 நித்திலம் பற்மமுஞ் சங்கமுந். **226.** 5 டாரநின்ற; 19 களதபு. **227.** 1 எல்லிய; 8-9 புரியொடு மிக்கவள்; 14 சீருணி(யோ); 19 சித்திர. **228.** 3 ருள்கிச, ருள்கீச, ருள்கீசு. **229.** 6 அருத்திய; 13 மளிதங்கத்; 15 மான்மதமாந்.

**230.** சாந்தின் பொதுப்பேர் கலவைகா லேகந் தளம்விரைசெஞ்
சாந்தென்பர் குங்கும மங்கரா கம்பூ சுவதகரம்
சேர்ந்ததோர் காசறை யேல மயிர்ச்சாந்து தேய்வைசெச்சை
ஆர்ந்த குழம்பு சதுர்த்தலுங் கொட்டலு மப்புதலே. 7

**231.** புலர்த்தல் வரித்தலே பூசுதல் பொற்பார் மகளிர்க்கென்று
நலத்தகல் லாகத் தெழுது வரித்தொய்யில் நற்சுடிகை
மலைத்த திலதந் திலகமுஞ் சுட்டி மடந்தையர்க்கு
மிலைத்த திருமுண்டம் புண்டர மாநுதன் மேற்குறியே. 8

**232.** குலங்கொண்ட சேலேகஞ் சிந்தூர மிங்குலி கம்மிதுசா
திலிங்கமென் குற்குலுங் குங்குலு வுங்குங் கிலியமென்பர்
இலங்கு மரக்கா மரத்தந்துப் பிங்கு பெருங்காயமாம்
துலங்குங் கவரியே சாமரஞ் சாமரை சொல்துணிந்தே. 9

**233.** துவரிந் தனங்காட்ட மாகும் விறகு சுடுசமிதை
இவர்கின்ற வோம விறகென் னெரிகடை கோல்ஞெகிழி
அவிரு மறுகு மரிசியுங் கூடிய தச்சுதமாங்
கவரு முளரி யலாத மிராதங் கடைக்கொள்ளியே. 10

**234.** கந்து ளிருந்தை கரிசாம்ப லாம்வெண் பலியடலை
நந்துஞ் சுதையுங் களபமு மாகு நறுஞ்சு[ணச்]சாந்
துந்து மரிதூம மாவி புகைவெடி யோங்குநறை
நுந்தும் புகைகுய் குரூஉப்புகை துய்பஞ்சி னுண்ணுதியே. 11

**235.** நுண்ணென் பிதிர்சிதர் சின்னம் பராக நுணுகுததர்
சுண்ணம் பொடிநீறு பூதி துகள்நூறு தாதுசன்னங்
கண்ணுங் குறுமலங் காட்டில வின்பஞ்சு பூளைகரித்
துண்ணுஞ்சிற் றுண்டி கருனை குழம்புபா கொன்றினவே. 12

**236.** ஒன்று மசன மிதவை மடைகூ ழுணவயினி
சொன்றி நிமிரல் பதமூரல் போனகந் துப்புப்பொம்மல்

**230.** 6 சாந்தெனல்; 15 தேய்வைசச்சை; 17 குழம்பாஞ். **231.** 2 விரித் தலே; 8-9 தெழுதுவ தாந்தொய்யில்; 10 நற்சூடிகை; 15 மடந்தையர்க்கா. **232.** 5 கம்மிவைசா; 8 குங்கிலு; 11 அலங்கு; 12-13 மதமற மிகதுத் தந்துப்; 18-19 சாமரை சாமரம். **233.** 13 நிசியுடன்; 16 கவரி. **234.** 1 தந்து; 4 லாம்வெம்; 7-10 சுதையே களபங் களமகனவில் சுடுசாந்; 10 நறுஞ்சுடுசாந்; 14 யுகைவெடி; 14-15 புகை பிண்ணுக் கொச்சையுடன்; 17-18 வறைய மலாவகந்; 19 தூய்பஞ்சி. **235.** 5 நுணுகுதாதாஞ்; 10 தாது தண்ணங்; 12 குயமலங்; 19-20 குறுநறை யென்றுந் துய்யே. **236.** 8 புகமூ ரல்; 14 பககணுச், பககனுச், புகருணுச்.

துன்றிய வோதன மன்னம் பகருஞ்ச் சோறமலை
அன்றியும் பாளிதம் வல்சிபால் புன்க மடிசிலுமே. 13

237. அசித்தல் நுகர்தல் மிசைத லருந்த லயிறலுண்டல்
பொசித்த லொடுதுய்த்தல் மாந்தலு நுங்கலும் பொங்குணலாந்
திசைப்பலி யேசருத் தேவர்க் கமுதவி திற்றிதுற்றி
மிசைத்துடன் றின்பன வுண்பன வாமென்று வேண்டினரே. 14

238. வேதக மாகிய வாவிகஞ் சம்வெந்தை பிட்டிலட்டு
மோதகம் பூரிகை யஃகுல்லி சக்குல்லி மூண்டநொலை
பேதக மாகிய சிற்றுண்டி பிண்டி நுவணையிடிக்
கோதினர் கஞ்சியுங் காடியு மோழையென் றெண்ணுதலே. 15

239. ஒண்டயி ராகு மளையுந் ததியுநெய்க் கோதுதுப்புங்
கொண்ட விழுதுங் கிருதமு நேயமுங் கூறுவர்பால்
உண்ட வமுது பயங்கீர மென்பர்மோ ரோதில்முசர்
மண்டிய தக்கிரந் தேனும் பிரசம் மதுவிவையே. 16

240. வைத்த விசையங் குளங்கன்னல் கட்டி மருவியபா
கொத்தியல் சர்க்கரை யக்கார மாகு முரியகண்டம்
பத்திசெய் பாளிதங் கண்டாகும் பானம் பருகுவன
அத்தி தருமமு தாமென்பர் சாவா வருமருந்தே. 17

241. மருமாலி பாடலி மாதவங் குந்தி மருட்டமட்டுப்
பிரச மதுவந் தணியல் படுவேரி தொண்டிபிழி
சுரையரி தேறல்சா றும்பல் சுலோகி சுமாலிதொப்பி
முருகு விளம்பி யளிசிக் கரஞ்சாதி மோகிகளே. 18

242. கருதில் விலங்கி னுணவு குளகாந் துணைக்காரணந்
தருமுப காரணந் துப்புடன் சாதகஞ் சாற்றிரண்டாம்
பெருகு முகள முபையம்வெண் டோர்கினல் பேய்த்தேரதாம்
நிரலொளி பந்தி யொழுங்கு நிரையென்பர் நீதவரே. 19

**237**. 16-18 மிசைத்தலுடன் றின்பண வுண. **238**. 16 கோதின; 17 கஞ்சி யங்; 20 றேுதினரே. **239**. 9 நெய்யென்று. **240**. 3-4 குளங்கட்டி கன்னல்; 19 சாலா. **241**. 2 பாடல; 3-4 மாதுவங் கந்தி; 5 மருட்டிமட்டுப்; 6-8 பிரசந் துவளி கணியல்; 14 சுலோதி, சுவோடு; 18-19 யளிசிகங் காஞ்சாதி; 15 மோதிகளே. **242**. 10 சாற்றுபையம்; 13 மிரண்டாம்வெண்; 20 நீத்திலரே, நீத்தவரே.

243. நீடும் பதமும் பொருளுந் தெரிந்து நிலைபெறவே
நாடு மவர்க்கு நலந்தரு மாறு நயத்தொடென் றுங்
கேடும் பெருக்கமு மில்லாத தேவைக் கெயாதரன்சீர்
பாடுங் தமிழிலா றுவது பல்பொருட் பேரியலே. 20

ஆறாவது பல்பொருட் பெயரியல்
முற்றும்

243. 17 தமிழா.

ஏழாவது

## செயற்கை வடிவிற் பெயரியல்

244\. பொருமுத் தலைக்கழு முத்தலை வேல்சூலம் பொற்கழுமுள்
பரசு நவிய மழுப்பால நல்ல படுகணிச்சி
செருவில் வளையாழி யெஃகஞ் சுதரி சனந்திகிரி
பருதி யுடனேமி சக்கர மாமென்பர் பான்மொழியே. 1

245\. மொய்சிலை கார்முகங் கோதண்டஞ் சாப முனிதனுவே
வெய்ய சராசனம் வேணுக் கொடுமரம் விற்றவராஞ்
சைவ பிரான்விற் பினகந் திருமால்விற் சார்ங்கமென்ப
எய்யும் விசையன்விற் காண்டீபம் வானவி லிந்திரற்கே. 2

246\. திரிசரம் பாணங் ககங்காண்டஞ் சித்திர புங்கம்பல்லம்
வரிகணை யாசுகங் கோல்கங்க பத்திரம் வாளியம்பு
பரிமாற் கணமே விசிகஞ் சிலீமுகங் கோப்பகழி
பொருகுதை தோணிவண் டத்திரஞ் சாயகம் புங்கவமே. 3

247\. புங்கம் பகழி புதையம்புக் கட்டா முடுமரக்கோல்
தங்கு முதணமொட் டம்பாகுஞ் சத்தி யுடம்பிடிவேல்
எங்கும்விட் டேறா ணங்குந்த ஞாங்க ரயிலெஃகமாம்
வெங்கப் பணந்தோ மரமிவை கைவேல் விகற்பங்கொள்ளே. 4

248\. கொய்தரு சம்பங் குலிசங்கம் வச்சிரங் கோவசனி
வெய்ய கரவாளங் கட்கங் கரவாரி வேணுவஞ்சம்
நைதரு நாட்டங் கடுத்தலை கண்டக நாந்தகம்வாள்
ஐய வுவணி நவிர்கோண மின்னும் அசிகண்டமே. 5

249\. கரபத் திரமே[வு] வேதின மீர்வாள் கதைதடிதண்
டெரியொத்த பீலித்தண் டெஃக முடீன்பிண்டி பாலமென்க
சுரிகை யுடைவாள் கழுமுள் கழுக்கடை சூழ்கொடுவாள்
பரிய குயம்புள்ள மாகு முசல முலக்கைபன்னே. 6

**244**. 1 பெருமுத்; 5 பின்கழுமுள்; 8 மழுவால; 12 வளைவாளி. **245**. 15 சார்ங்க மென்பர்; 16 எய்ய. **246**. 5 பங்கம் பல்லம்; 11-12 பரியுந் துரோணம்; 17-18 தோணிமே லத்திரஞ்; 17 தோணம்வண். **247**. 7 முதணமுட்; 12-15 டேறரண் குந்த மயில்ஞாங்க ரெஃகமென்பர். **248**. 1 கொய்யதஞ்; 5 கோபசனி; 9 (ந்) தரவாரி; 11 கையரி; 14 காண்டக. 16 வைய; 19-20 மின்வசி கண்டகமே. **249**. 1-3 கரபத்திரமும் வெ்தினமு.

250. பரிக மெழுவே கணையப் படைபல் படைக்கலமுற்
கரமேதி மட்டி முசுண்டிசங் கேபட்டங் கூர்த்திகைகாத்
திரியா மிருப்புமுட் டாறுநா ராசஞ் சலாகைசெப்பில்
மருவு தறிகை யுளிகணிச் சிப்பேர் வழங்குபவே. 7

251. குளிரிலை முக்கரி கத்தி பிடிகைது மானங்கொய்தார்
நளிதரு சாந்து முதலா னவைபயில் நற்கலமாம்
பொளிதரு பொற்கொல்லன் சின்னத்தட் டாங்கன்னம் பூகிசிதம்
வளர்நுதி வையார் வசிவயிர் கூரயில் வள்ளொடள்ளே. 8

252. அடுபடை சாதனந் தானை படைக்கல மாயுதமே
கடுமுட் கருவி கழுமுள் ளொடுதுப்புங் காட்டுமென்ப
தொடுநுதி நுங்கி நுனைமுனை யாமாவந் தூணியென்பர்
தடறு படையுறை யேகரு விப்புட்டில் தானறியே. 9

253. அரணந் தகைபரிடி சாலிகை மெய்யுறை யாசுகண்டஞ்
சுரிகை பரம்பாரம் வாரணம் வாரந் தொடருமெய்சூழ்
கருவி கசைதம்ப மாகுங் கவசங் கடகுதட்டு
மரவட் டணமென்பர் தோற்பரந் தோல்தோற் பலகைமற்றே. 10

254. பலகையாங் கேடகந் தோல்வே திகைசே டகம்பரிசை
குலவிய கைப்புடை கோதைகைக் கட்டி குசைவற்கமாங்
கலனை பருமம் படைபரம் பல்லணம் பண்கருவி
கலினமு நல்ல கறுழுங் குதிரைவாய்க் கட்கயிறே. 11

255. கருதுங் கவடு புரோசு கழுத்தி லிடுகயிறுந்
தருகு நிகளந் தொடர்வல்லி பந்தந் தளைவிலங்காம்
மருவும் பறலை பறலிகை பற்றள் வலியிரும்பாம்
பரியகங் கிண்கிணி பாதசா லங்கால் மணிவட்டமே. 12

256. மணிநூ புரமோ டரவம் பரிபுரம் வார்ஞெகிழம்
பணியுஞ் சிலம்பரி பாடகம் பாத கடகமென்பர்

**250.** 3 கணையம்; 7 மத்தி, மிட்டி; 7-8 மத்திகை சுண்டிசங்; 11 திரிய. **251.** 4 பிடகைது; 14 டாந்தன்னம்; 15 களிசிதம்; 20 வாளொடள்ளே. **252.** 12 நுங்கு; 14 மாமாவந்; 15 தூணியென்ப. **253.** 7 யமம்பரம்; 7-9 யபாம் பரம் வாரணம் வார்; 20 பலகைபற்றே. **254.** 1-2 பலிகேடகவட் டந்; 4 திகைகே; 12 பருவம்; 13 படைமரம். **255.** 5 விடுங் கயிறுந்; 11 பரவு; 12-15 மபறலை பூலிகை யள்ளு வலிபற்றென்ப. **256.** 3 டரதம், டர தனம்; 5 வார்ஞெகிழி; 20 கலசமமே.

அணியுங் கலாபம் விரிசிகை காஞ்சி யரைப்பட்டிகை
தணியு மனவு பருமங் கலேமே கலேசமமே. 13

257. சதங்கை யரைநா ணிரதனங் கிண்கிணி யாம்பதக்கம்
இதந்தரு கண்டிகை யாரம்பூ ணுரு மெழிற்கடையே
விதங்கொள் கயில்பூண் கடைப்புணர் வாந்தாம மென்முலேமேல்
மதந்தரு கண்டிகை மாலேகா சேகாழ் வடங்கோவையே. 14

258. கோடிய தொங்கல் மதலிகை தூக்கங் குருகுகன்று
சூடகஞ் சங்கு தொடிசரி கைவளே தோளணியே
நாடிய வங்கதங் கேயூரங் கங்கண நற்கடகங்
கூடுந் தொடியுங் குழைதோடு மிஞ்சிகை குண்டலமே. 15

259. குலவு கடிப்பிணே வல்லிகை வேடக முங்குழைப்பூண்
உலவுறு சுட்டி சுடிகை நுதற்குறி யோடைபட்டம்
பொலஙல் விலம்பகம் புல்லக மாநுதற் பூண்சிரமேல்
விலகிய மாலே கரோடிகை யாக விரும்பினரே. 16

260. விரும்புஞ் சுடிகை மவுலி கிரீட மகுடமின்சே
கரம்பொன் முடியென்பர் காதணி கன்னப்பூ கன்னபூரம்
அரும்பு சுடராழி மோதிர மாம்பே ரணிகலமே
பெரும்பூண் மதாணி கொடும்பூணென் றூர்சொற் பெரியவரே. 17

261. பெரும்பேர் மதாணி யிழையா பரணம்பூண் பேசிலணி
தருங்கல னுந்தாலந் தட்டகை தட்டமாஞ் சாற்றில்வட்டில்
வருங்கிண்ணங் கோரமும் வள்ளமா நாழிகை வட்டில்கன்னல்
அரும்பெயர்த் தவ்வி சிலகமுஞ் சட்டுவ மாமென்பரே. 18

262. ஆடி படிமக் கலந்தர்ப் பணமா தெரிசனத்தோ
டேடியல் கஞ்சனே கண்ணுடி யாகு மிலங்குகண்டை
பாடிக லானே மணிகைம் மணிமுத லாப்பரந்து
கூடியங் தன்மணி யாகும் படலிகை கோல்வளேயே. 19

263. கோலுங் குறிஞ்சிப் பறைதொண் டகமு முருகியமும்
ஏலுந் துடியு மதற்கே துடிபாலேக் கெய்துமென்ப

**257.** 19 சேதாழ். **258.** 3 மதிலிகை; 17 தொடியாங்; 18 குழையொடு. **259.** 5 முங்குழைபூண்; 6 உலவிய; 14 மாணுதற்; 15 பூண்கரமேல்; 20 விளம்பினரே. **260.** 1 விரும்பு; 5 மகுடமென்சே; 10 கன்னபுரம்; 15 ரணி கலப்பேர். **261.** 13 வள்ளமும்; 16 அரும்பெயர். **262.** 9-10 யெந்த முதி ரங்கண்டை; 11-12 பாடிய லாவன்; 16-17 கூடிய கைம்மணி. **263.** 10 மேலதென்பர்;

பாலியல் முல்லைப் பறையேறங் கோட்பறை பம்பையுமாம்
காலுங் கிணையே மருதத் திணைப்பறை காரிகையே. 20

264. காகளங் காளஞ் சிறுசின்னம் பீலி கருதுநெய்தல்
சாகும் பறையா மொருகட் பறைமொந்தை தண்ணுமையே
ஏகு முடுக்கை துடியாம் பதலை பரந்தபறை
ஆகுளி யாகுஞ் சிறுபறை மென்சொல் லருங்குயிலே. 21

265. குளிர்முழ வம்மண் கணைமுழா வெய்ய குடமுழவாம்
மிளிர்பணை சண்டை முரசு சகடை விளங்கியதுந்
துமிபே ரிகைதிண்டி மம்பண வம்மான கம்படகந்
தமில்வே றிலாத தடாரிதக் கைபம்பை சல்லரியே. 22

266. சரிதரு கொம்பு வயிராம்பல் கோடு தருகலையோ
டிரலையு மாமென்பர் கோடணை தூரிய மேன்றபணை
முரசுகாழ் பீலி முருடு முழவ மியமுழுதும்
மருவிய வாச்சியங் கட்குப் பொதுவென்பர் வல்லவரே. 23

267. வல்லகி தந்திரி வீணை விபஞ்சிதம் வார்கருவி
நல்ல வறுசலங் கோட பதிகின் னரம்யாழதென்
வல்ல முறுக்காணி மாடக மாகுந் திவவுவண்கட்
டொல்லையில் தந்திரி கோல்குரல் யாழிற் றொடர்நரம்பே. 24

268. நரம்பயி லெந்திரங் கூவிர நல்ல திகிரிவையம்
இரதங் கவரி சயந்தனந் தேரென்ப ரேய்ந்தசில்லி
பருதியொ டாழி திகிரி யுருள்நேமி பண்ணுமுந்தி
உருளிவை தேர்க்காலா மாரகத் துச்செறி யுட்கதிரே. 25

269. கருதிய சாகாடு வையஞ் சகடு கடியபண்டி
உருளொடு சாடு மொழுகையுந் தேர்மொட் டுபர்கூவிரம்
பெருகிய கூம்பு கொடிஞ்சியென் றுந்தட்டுப் பாவுடனே
சொருகு கிடுகுதேர் மேற்புடை சூழ்மரச் சுற்றென்பரே. 26

270. படைய்ல நாஞ்சில் கலனை கலப்பையாம் பற்றுத்தம்பம்
நடுதறி கந்து மதலை யெழுத்தூணு நல்லகம்பம்

**263.** 13 பறையேறு ; 17 கிணையா. **264.** 16 காகுளி, 20 (ற்) கருங்குயிலே. **265.** 1 குளிர்முர ; 2 லம்மண் ; 3 கணைமுழா ; 16 திமல்வே, திமில்வே. **266.** 1 சரிதரு ; 5 தருதலையோ. **267.** 1 வல்லிகை ; 11 மல்லல் ; 15 திவவுவன்கட் ; 18 தொல்குரல். **268.** 10 வேந்தைசில்லி ; 17-19 தேரக்காலாரக்த்துச் செழு(மு). **270.** 9 யெழுத்தூண ; 10 நல்லதம்பம்.

அடுகளி றூர்வெளி லாளானம் யூபம்வேள் வித்தறியாம்
முடுகு குறுந்தறி போதிகை சீப்புத்தாழ் மொய்குழலே. 27

271. குணிலே குறுந்தறி பட்டடை யாகு மடைகுறடு
பணவை யிதணங் கழுது பரணும் பருங்குறடே
இணையில் முருடா முறிசிதர் சிக்கஞ் சிமிலியென்பர்
தணிவி லுலூகங் கறையுர லாமலர்த் தாழ்குழலே. 28

272. குளிர்தழல் தட்டை யிவையாங் கிளிகடி கோல்கருவி
அளிதரு வாரி கபாடம் புதவிவை யாங்கதவங்
களிதரு பாரி பரியங்க மஞ்ச மிழிகைகட்டில்
சுளிதரு மூஞ்சலு மூசல் துடுவை துடுப்பென்பரே. 29

273. எள்ளு மிறவை கடவைமால் பாகுங்கண் ணேணிதிமில்
தொள்ளம் பஃறி மதலையா னம்மம்பி தோணிவங்கம்
நள்ளுங் கலம்பாறு பாரதி போதக நாவாயுமாந்
தெள்ளம் படுவை பகடு புணையம்பி தெப்பம்பற்றே. 30

274. பண்ணு மரக்கலப் பாயிதை யாகும் படர்கரகங்
கண்ணுங் கரண்டைநற் குண்டிகை தானுங் கமண்டலமாம்
எண்ணிய மஞ்சுக மஞ்சிகை பேழை யினிக்கடப்பம்
நண்ணுங் கரண்டகங் கோடிக மாகுநற் கெண்டிகையே. 31

275. கைத்த கலாபந் தழைதொங்கல் பீலிக் கவிகையென்பர்
முத்தணி வெண்குடை பிச்சங் கவிகை முடிவில்தொங்கல்
சத்திரஞ் சிற்றால வட்டஞ்சாந் தாற்றியாங் கால்செய்வட்டம்
வைத்த சிவிறியே யுக்க மிவையால வட்டமென்னே. 32

276. வட்டிய சிக்கமுஞ் சீப்புச்சூ தாடு கருவிவல்லுங்
தொட்டியல் காசுங் கடிகையுங் கண்டமுந் துண்டமென்பர்
கட்டுஞ் சுமடு சுமையடை சும்மாடு கந்துகம்பந்
தெட்டிய தந்துப் பனுவல்காற் பாசநூ லேந்திழையே. 33

277. இழைதரு வள்வகிர் வாராகும் பாசநா ணேகயிறுங்
கழல்தொடு தோலா மடியிற் றொடுவன பாதுகமாம்

**271**. 2 குறுந்தடி ; 16 தணியி. **272**. 5 கொள்கருவி ; 10 யாங்கதவு ; 11 தளிதரு. 17-18 முஞ்சலுமூஞ்சல் ; 19 துமுவை. **273**. 6 கொள்ளும் ; 16 தெள்ளும்; 20 சூழ்தெப்பமே. **274**. 5 பகடுகாதம்; 12-13 மஞ்சுத மிஞ்சிகை. **275**. 2 கலாவந் ; 17-18 சிவிறியோ டேத. **276**. 3 சீப்புஞ்சூ ; 5 கருவிவல்லுத் ; 6 தொட்டல; 7 தாசுங்; 8 கடினையுங்; 13 சுமையடு; 15-16 கந்துகம்ப மெட்டிய; 16 தொட்டிய ; 20 லோங்கிழையே. **277**. 7 தோலே(ய) ; 10 பாதுகையாம் ;

தழுவுஞ் சிவிறி துருத்தி மிடாநற் றடாவடுவை
குழிசியும் பானை மிடாவக ளந்தடாக் கொள்கவம்பே. 34

278. கடம்பா சனமட் கலங்கும்பங் கன்னல் தசும்பிடங்கர்
குடங்காண்மின் கன்னல் சிரகஞ் சிரதமுங் கொள்கரகம்
இடங்கர்வட் டம்நீர்ச்சால் சாடி யகள மினப்பதலை
அடங்கிய தாழியென் சுத்தி சராவ மகலென்பரே. 35

279. படிபுட் டகந்தூ சொலியல்வா சம்புரி வட்டம்பட்டம்
மடிதுகில் கோடிக மம்பரம் வாதனஞ் சேலையுஞ்சம்
படமறு வைசாடி காடகந் தானையோ டாடைபடம்
உடைகலை காழக நீவி கலிங்கமா சாரமொன்றே. 36

280. ஒன்றிய கூறை யுடுக்கை புடவை யிடையல்பங்கம்
சென்ற கருள்புங்கஞ் சில்லிகை யேடகஞ் சித்திலிகை
நன்றுசெய் கத்தியங் தூரியம் பாரிநல் லாடையென்ப
நின்றபட் டாடையும் பாளிதங் கோசிக நேத்திரமே. 37

281. திறவிய வற்கலை சீரை யிறைஞ்சி மரவுரியாம்
துறைபயில் கம்பலஞ் சிம்புளி செம்படாஞ் சூழியென்றும்
பெறுவ முகபடா மேற்போர்வை மீக்கோள் பிணிகைவம்பு
மறைதகு பட்டிகை வாரிவை கச்சு வரிமுலையே. 38

282. வரிந்த விதானமாங் கம்பல மத்தவா ளம்வடகம்
உரந்தரு மேகாச முத்தரி யம்மா முடுத்தல்சுற்றல்
தரந்தரு கஞ்சுளி கஞ்சுகம் வாரணஞ் சட்டையங்கி
பரந்தரு குப்பாய மெய்ப்பையென் வானி படங்கென்பரே. 39

283. பரந்த திரைகண்டங் கஞ்சிகை பாரகம் பைங்கழினி
வரைந்த வெழினி படாமாம் வெளியடை வர்னிதுகில்
உரங்கொள் விலோதந் துகிலிகை கேதன முத்தியுடன்
நிரந்த பதாகை துவசம் படாகையு நீள்கொடியே. 40

**277.** 15 றடாவுடுவை; 16 குழிசிலும்; 19 ளந்திடாக். **278.** 1 தடம்பா; 12 டம் நீரச்; 15 மினிப்பதலை; 16 அடங்கர; 18-19 னேசுத்திசாரவ; 20 மகலென்பவே. **279.** 4-5 சஞ்சூடி பரிவட்டமா; 7 கோசிகம்; 9 வந்தனம்; 10 சேலை மஞ்சம். **280.** 5 யுடையல்பங்கம்; 12-14 யந்தூரியம் பாரியநல் ல(வா); 16-17 நின்று பட்டாடைகள். **281.** 6 சிறைபயில்; 7 கம்பளஞ்; 15 விணிகைவம்பு; 16-18 மறைபட்டிகை வட்டடை வாருந்; 20 வனமுலையே. **282.** 6 உரந்திக (மே); 8 முத்திரி; 11-15 தருகஞ்சுகி யங்கி கஞ்சுகம் வார் வாரணஞ் சட்டையே; 16 மரந்தரு. **283.** 1-2 பாரந்திரை கண்டகங்; 5 பைங்கழுனி; 11 உரந்த; 15 முத்திகச(னி).

284. கொடியிற் சிறிய கதலிகை சீரை சிதவல்சிதார்
அடர்பொற் றளிமந் தவிசணை மெத்தை யணிசித்திரப்
படமது பொத்தக மோவியஞ் சித்திரம் பட்டிகையே
புடைகொள் துகிரிகை தீட்டல் வரைதல் பொறித்தலென்னே. 41

285. பொங்கிய முன்னூற் பொருள்தெரிந் துண்மைப் பொருளனைத்துந்
தங்கிய ஞானந் தலைப்பெய் துலகந் தழைக்கவென்று
செங்கயல் போலும் விழியாய் கெயாதரன் செய்தமைத்தான்
எங்குஞ் செயற்கை வடிவிற் பெயரிய லேழாவதே. 42

ஏழாவது செயற்கை வடிவிற் பெயரியல்
முற்றும்

284. 1 கொடிய; 5 சிதவல்சிதர், சிதமல்சிதர்; 9-10 மெத்தை[யே] கோசஞ்சித்ரப்; 15 வட்டிகையே. 285. 10 தழைக்க வென்றுஞ்; 18-19 வடிவினிற் பேரிய.

## எட்டாவது
# பண்புப் பெயரியல்

**286.** வட்டந் திகிரி பருதி வலையம் வளைவுகொம்மை
தட்டு விருத்தங் கடகஞ்சில் லிகோ ளகைசக்கரம்
சுட்டிய பாலிகை மண்டில நேமியோ டாழிசொல்லில்
ஒட்டிய பாண்டிலும் வாளமு மாமென் றுரைத்தனரே. 1

**287.** தடவு வணர்வாங்கு கோட்டங் குலாவல் குரங்கல்தட்டுக்
குடிலம் வளைவாகும் பந்தந் தொகுதி குவவுகொம்மை
மடிதரு புஞ்சந் துறுமலுண் டைசோக மாழைபிண்டங்
கடிகணை கட்டி திரளைசே டாமென்பர் காண்குறித்தே. 2

**288.** குவையுங் குவாலு மிராசியுங் குப்பையுங் கொள்குவவும்
எவையுங் குவிதற் பொருளாந் தொகுதி குழுமலென் றுந்
துவையுங் கருவிமொய் தோடு தொழுதி துறுவுதுற்றும்
நவையி லடாரி பை[ம்]மை வடிவின நற்கொடியே. 3

**289.** கொப்புளா மொக்குள் குமிழ்ப்புப் புளகங் குழல்புழல்தூம்
பொப்பில் சுரைநாடி யோதுந் துவாரம் புழைதுளையாந்
தப்பில் தொகுதியாங் கற்றை பிணாகுஞ் சர்ச்சரையுஞ்
செப்பில் விசித்திரம் பேரழ காஞ்சித் திரமழகே. 4

**290.** திருமலி தாடு தடவு தடமொடு செம்மைசெம்மல்
பெருமை விபுலம் வியல்நனம் பீடு பிறங்குநனி
இருமை கதழ்வு கயமூரி பாழி யிடம்பின்முன்பு
கருமை தகைபா டபரி மிதமால் கலந்தைநன்றே. 5

**291.** கருநும் பரிபணை வந்தை முடலைமாக் கண்ணகலுள்
குருவிற லண்ணல் வியன்வான் பெருமை குறுமைவஞ்சம்
பரிமித.மற்பம் வறிதாசி லேசிறை பற்றிலகு
சுரிகிலந் தோகந் தனுத்தன்று சன்னந் துடியணுவே. 6

**286.** 8-10 கடகமுஞ் சில்லிகோளகை சக்கரமாம்; 13 மண்டல; 19 மென்றங்(கு). **287.** 1 குடவு; 3 கோடல்; 5 குரங்கல்குட்டுக்; 10 குயவு கொம்மை; 16 கடிகனை; 20 காண்குறிக்கே. **288.** 11 துவருங்; 17 லடாரி; 17-18 (ல்) படலை படர்ச்சி. **289.** 3 குமிழ்ப்பும்; 5 குழல்புழல்தா(மொ); 7 சிரைநாடி; 12 தொகுதியாற். **290.** 3 தடவி; 19 மிதமாங்; 20 கலவைநன்றே. **291.** 5 கம்மகலுள்; 16 சுரிதிலகந், சுருகிலந்; 17 தொக்கந்; 18 தனுத்தன்னு.

292. அண்ணும் பருப்பீன மாகும் பருமை யமலைபொம்மல்
நண்ணும் விதப்புயர் பான்றல் கயவு நளிபுதுமை
எண்ணும் பிறங்க லதிகஞ் சிறப்பாற்ற லேற்றமிவர்
கண்ணு மதம்பொக்க மீக்கோள் மிகுதி கதழ்வுகப்பே. 7

293. உறுதவ வோடு கழிவு கடுமை யுருப்பிறப்புப்
பெறுநனி யாவு மிகுதிப் பொருள்சேண் பிறங்கல்புரை
முறுகிய வுன்னதந் துங்க முகப்பேந்தல் மோடுநிவப்
பிறுகிய வோங்கல் நிமிர லுயர்ச்சி யெழுச்சியுமே. 8

294. எழுதரு நீளிடை யுஞ்சேணுஞ் சேய்த்து மிவைதூரமாம்
பழுதில் விசாலம் விபுல மிடம்பாடு பாய்ஞெமிர்தல்
தழுவிய பப்புப் பரப்புடன் தாவும் பரவையுமாங்
கொழுவும் பயினி யுடன்கூடல் குந்தலுங் கூடுதலே. 9

295. கூடிய வார்சேண் வரியுறை போகல்நேர் கொண்டொழுகல்
நீடல் வடிதல் நெடுமை நெடில்தீர்தல் நீளமென்ப
நாடு நுவணை நுணுகு நுணங்கோய்தல் நைவொசிவு
கூடு நுழையயிர் சாயல் நிழத்தல்நுண் கூர்மையுமே. 10

296. கூர்ப்புக் கழிவுள் ளதுசிறக் கும்பாழி கொள்விபுலம்
ஆர்க்கும் விசாலம் வியலிட மான்ற லகன்நளிமா
ஏர்க்கு மகலுள் படம்படர் கண்ணறை யேயகலம்
ஆர்க்குங் கயவுடன் மேம்பாடு சாயல்சால் பாமென்மையே. 11

297. மெல்கிய வஃக லருகல் குறைதல் விகலங்குன்றல்
ஒல்கல் சுருங்கல் நிரப்பீனஞ் சிங்க லுறப்புத்துற்று
நல்ல விறப்பு வெறுப்புப் பொதுளல் நளிபவர்த்தல்
எல்லையிற் செற்றல் சடிலங் கடிசெறி விங்குதலே. 12

298. தண்டும் விரள நிபுடந் துதைதல் ததைதல்துன்றல்
மிண்டல் செறிதல் நெருங்குதல் பம்பல் மிடைதல்துன்னல்

**292**. 2 பருப்பன, பரூப்பீன ; 4 பெருமை ; 15 லேற்றமிவர்க் ; 17 மத லோக்க. **293**. 3 கதழ்வு ; 9 பெயர்சேண் ; 10 பிறங்கல் பரை, பிறங்குபுரை. **294**. 3-4 யுஞ்சேய்த்துஞ் சேணு ; 12-13 பப்புயர் வைப்பகங் ; 17-19 பயனி யுடனி யுடன் கூடல்; 18 யுடன் கூடங். **295**. 2 வார்சொன்; 4 போதல்நேர்; 9 நெடில் நீக்கல் ; 16 கோடு ; 19 நிழற்றல் நுண். **296**. 8 நியனிட ; 10 (ல்)நனநளி யாய்; 14 (க்)கண்ணுறை ; 16 பார்க்குங் ; 17 கயம்வியல் ; 20 பாழ்மென்மையே. **297**. 15 நளிபவர்த்தல்; 20 யிங்குதலே. **298**. 3-5 (ந்) துவன்றல் நிபுடந் துதைதல் துன்றல் ; 9 பம்மல் ;

மண்டுங் கழுமல் துவன்றல் தெவுளல் மலிதல்மல்கல்
கண்ட முழுதார்தல் பூரண மிண்டல் கமநிறைவே. 13

299. நிகர்த்தல் தெவிட்டல் ததும்பல்விம் மல்பொங்க னின்றதனின்
மிகுத்த லபார மனந்த மபரி மிதமகண்டம்
தொகுத்த வளவின்மை செம்மை கருமை சுவேதம்பொன்மை
வகுத்த பசுமை யிவையென்ப ரைவகை வண்ணமுமே. 14

300. வருணம் புகலி லரத்தந் துவர்துப்பு வாய்ந்தசெக்கர்
அருணஞ் சிவப்பத்துப் பாடலஞ் செம்மை யராகநற்சிங்
துரமரக் குச்சேது சேப்பிங் குலிகமுஞ் சோணமென்ப
புரைதரு பிங்கலம் பீதகம் பொற்[செ]க[ன] லும்பொன்மையே. 15

301. பொற்பார் கபிலங் குரால்புகர் புன்மை சிதந்தவளஞ்
சொற்பா லருச்சுனம் பாண்டு சுசிவால் சுவேதம்வெண்மை
பைப்பாசு சாம மரியரித் துப்பச்சை பைத்தரிதம்
வைப்பாம் பலாசம் பசுமையுஞ் சாமளம் வாய்ந்தனவே. 16

302. தருகளங் கங்காளி மங்காள நீலஞ் சனங்கருள்கார்
கருமை யசிதமைக் காழக மாலாங் கசடுகறை
வருமலி னம்மாசு வண்ணம் புகர்மேனி மாமைகெழூஉக்
குருவுரு வுங்கேழ் நிறஞ்சந்த மாகுங் குளிர்நகையே. 17

303. நகைகிர ணம்மெல்லுக் கானல் செடிசுட ராநற்கெழூஉத்
தொகைவிளக் கஞ்சோதி வில்வா ளிலங்க லவிர்துலக்கம்
பகல்வு விரியல் தெளிர்தாமம் வாம மொளிபாடமின்
புகல்தரு சேத்தலுஞ் சேப்புஞ் சிவத்தலாம் பொற்கொடியே. 18

304. கொடியே யவிர்த லலங்க லிமைத்தல் குலாவல்நகல்
சுடர்த லொளிர்தல் வயங்கல் தயங்கல் துலங்கலொளி
விடுத லிலங்கல் விளங்கல் பதமாரி சாருநவ்வி
வடிவு மனோகரம் 'பைப்பூவை' யொண்செவ்வி மாண்பழகே. 19

**298.** 14 தெவுள்தல்; 17 பழுதார்தல், மழுதளதல்; 18 பூர்க்கண; 19 மீண்டல். **299.** 2 தெவுட்டல்; 7-8 லயானமதத; 10 மிதந்தண்டலே; 12 லளவின்மை; 15 சுவேதம் வெண்மை; 19 வைவகை. **300.** 2 புகல; 7-10 சிவப்புப் பாடலஞ்சேண் செம்மை யராகஞ்சிந்; 13 சேப்புங்; 15 சோணமுமாம்; 19-20 புற்கலம் பொன்மரமே, புற்கலமும் பொன்மையே. **301.** 5 தவளஞ்சிதஞ்; 9 சசிவால், சசிபால்; 11 பைப்பாவு; 15 பைத்தசிதம்; 18 பசுமையஞ். **302.** 2-5 காளிமங் கார்காள நீலஞ் சனங்கருளங்; 8-9 காழகமாகக்; 8-10 காழ்காரி மாலாங் கறைகளங்கம்; 17 வங்கேழ். **303.** 3 கான; 9 ளலங்க; 11 உகள; 13 தொளிர்தாமம்; 15 மொளிபடர்மின்; 16-18 நகல் வெயிற் சேத்தங் கறையுஞ்; 20 நன்கொடியே. **304** 5 குலவல்நகல்; 8 அலங்கல்; 14 தமரரி; 15 சாரிநவ்வி, சாருமிக்க; 18 வைப்பூவை; 19 பொன்சவி.

305. அழகுசீர் சொக்கோ டயில்வாமங் காந்தி யணிவிடங்கம்
எழில்பொற்பி யாணர் கவின்றகை தொட்டிமை யேர்மணிமஞ்
சொழிவில் பொலஞ்செவ்வி யங்கா ரிகைதைய லொப்புவனப்
பழிவில் வகுப்பந்தஞ் சுந்தரங் காமரும் மாமையென்னே. 20

306. மைந்து விறல்திண்மை மீளிதுப் பூக்கம் வலமதுகை
மொய்ம்பு மிடலாற்றல் நோன்மை திடமீடு மூரிமுரண்
பம்பல் வயமள்ளல் மல்லல் மதமெறுழ் பாழியுரம்
வன்பு திறல்பெல மேணரண் முன்புதா மாவலியே. 21

307. வலங்கொற்ற மாடல் விசையம் புகல்வயம் வாகைவென்றி
நலம்பெற்ற வெற்றம் விறலாண்மை வீர மதர்மதர்த்தல்
இலங்கு மிளிவும் பரிபவ மு[ம்]மா மிழித்தகவு
தொலைந்து புறந்தரல் தோற்றல் கெடுதல் தொலைவழிவே. 22

308. அங்கியல் கொள்கை யறிவு குணனுமா மாங்கினைதல்
இங்கிய வொற்றித் தலுமிரங் கல்நா[ட்] டியங்குறிப்பு
மங்கல மான வடிவுசெ[ண்] ணம்வண்ணம் சந்தமென்பர்
தங்கிய சாரித் திரங்குணஞ் சீலஞ் சரிதைநன்றே. 23

309. நன்ருகு மாத்திரை காலந் துணைவரை நல்லவதி
ஒன்ருன நேரம் பரிமாணங் காறுதா ரேருங்களவாம்
என்ருர்க ளேத மெளிமைதஞ் சந்தண்மை யெண்மையுமாங்
குன்ருத வெண்மை வெளிறு புரைதண்மை கோல்வளையே. 24

310. வரம்புட னேணி வரைப்புமட் டெல்லை மதிமுதிர்ச்சி
உரன்புலன் காட்சி யுணர்வொண்மை ஞான மறிவொடொட்பம்
புரந்த முதுக்குறை வேதெட்பம் போதநன் புந்திபுத்தி
நிரந்த பிரக்கினை சிந்தை மனமக நெஞ்சுள்ளமே. 25

311. உள்ளல் விரும்பல் நினைதல்சிந் தித்தலூ கித்தலுன்னல்
தெள்ளல் நினைவெண்ண லிங்கிதம் கண்ணுதல் சேத்துணர்தல்

305. 1 அழிவில்சீர் ; 1-3 அழிவிலாச் சீர் சொக் கயில்வாமங் ; 10 யோணி மஞ் ; 11 சொழிபுலஞ் ; 13 சுபங்கா. 306. 2 திறல் திண்மை ; 5 மறல் மதுகை; 16 வம்பு ; 17 திகம்பில, திதம்பில ; 19 முன்புகா ; 20 வாவலியே. 307. 12 மிழிவும் ; 17 புறந்தாங்கல். 308. ஒரு பிரதியில் முதலடி மறைந்துவிட்டது ; 6-15 சிங்கல் குறை பெருகல் குன்றல் நளிர்சீதஞ் சீதளமா-மங்கைகேள் மானம் பெருந்தன்மை குற்ற மளவிலச்சை ; 16-17 தங்குஞ் சரித்திரஞ் ; 16-19 தங்குஞ் சாரித்திரஞ் சீலங் குணநற். 309. 1 நன்முன ; 14 சாந்தண்மை ; 19-20 புரை தனங் கொள்வளையே. 310. 6 உரன்புலங் ; 14-15 போத மறிஞன்புந்தி ; 17 பிரச்சினை. 311. 3 இணை தல்சிந் ; 6 தெள்ள ;

கொள்ளல் நுதலல் கருதலே மாத்தல் குறித்தலென்ப
வள்ளிய கச்ச மளவுங் கடனுமா வைத்தனரே. 26

312. ஆதரங் காமம்பற் றுசை நசைவாஞ்சை யார்வமிச்சை
மாதர்பே ணல்பெட்புப் பெட்டல்வெப் பந்தாழ்தல் மற்றும்வெஃகல்
காதல் நலம்பாசம் வேட்கை விழைவு கசிவுநம்பு
வீழ்தல் கவர்த லவாவே யிவர்தல் விரும்புநச்சே. 27

313. புரிவுநா ரு[ம்]மன்பு மீரமும் வாரமும் பொங்களியும்
பரிவுந் தயாவுங் கருணையுங் கண்கா ருணியம்பற்றோ
டருளுங் கிருபையு மார்வமும் நேயமு மாமிரக்கம்
விரக மதனனல் வேணவா வேட்கை மிகுதியென்னே. 28

314. திருந்திய மாண்மாண்டல் மாட்சிசால் பான்றல் திகழமைதி
தருந்தொன் னிறைவாந் தகவுந் தகுதியுந் தக்கதென்ப
வருந்து முனிவு மறஞ்செயிர் சீற்றஞ் சினம்வயிரம்
விரிந்த வெகுளி கறுவு கதஞ்செற்றம் வேகமுமே. 29

315. வேகஞ் சிவப்புக் கறுப்புப் புழுங்கல் வியர்த்தல்கன்றல்
ஆக மழல்தல் புகைத லனலுதல் வெய்துறலாங்
கேகுஞ் சினக்குறிப் பென்ப றிறும்பூ திலேச்சுவியப்
பாகும் விபரிதம் விம்மித மைந்து மதிசயமே. 30

316. அதிசய மாகுமை யோவந்தோ வன்னோவோ வாவிடைச்சொல்
வதியு மிரக்கக் குறிப்புமாங் கண்மைகண் ணோட்டமற்றும்
புதிய நயம்புணர் வாநாக ரீகம் புனைசெருக்கு
மதர்வு பெருமிதம் பாடவ மத்த மனக்களிப்பே. 31

317. மனத்தழுக் காகு மழுக்காறு சுட்டல் குறித்தல்மற்று
மனக்கோட்ட மவ்வியம் பொச்சாப் பிழுக்கு வழுக்கிகழ்ச்சி
மனச்சோர் விழிச்சி யயர்வு மறவியே மால்மறத்தல்
மனக்கூரங் கோரஞ்சண்டங்கொடு மையாகு மற்றிவையே. 32

311. 11-12 கொள்தங்கல் பேணல்; 12 நுதலுதல்; 15 குறிப்புக்குதல்; 16 வள்ளியங். **312**. 6-7 மாதர் நேயம் பெட்பு; 8-9 பெட்டல் வெம்மை தாழ்தல்; 9 புத்தாழ்தல்; 15 கசிவுநட்பு; 19 யிவறல்; 20 விதப்புநச்சே. **313**. 1 புரியும்நா; 10-11 ருணியம் பற்று மருளுங்; 14 வாரமு; 17 மதனல, மதனம்நல். **314**. 10 தக்க தென்பர். **315**. 2 சிவத்தல், சிறுத்தல்; 8-10 புகைகின்றல் வெய்துறலாங் கவையு(மே); 11 கேகஞ்; 13-15 பாமிறும் பூது மிலேச்சுவியப்; 19 (ம்) யாவு. **316**. 2-4 மாமையோ வந்தோவன்னோவாவோ; 8 குறிப்பினுங்; 16 மதர்வே. **317**. 1 மனச்சழக்; 12 வவிச்சி; 14-15 மறவி மறல் மறத்தல்; 16 மன்க்குரூரங்; 19 மையா.

318. மலர்ச்சிசெம் மாப்பேக் கழுத்த மிறுமாப்பு மற்றுரனும்
உலைத்தலி லூக்கமு முள்ள மிகுதி முதுக்குறைவு
நிலைத்த முகரிமை யும்பே ரறிவும் நிலையுடைமை
துலைத்தவேண் கோணை கொடுமைதீ தாமூறுங் கோளுஞ்சொல்லே.

319. சொல்லிய மானமும் வெள்கலும் வட்கலுந் தொல்சமழ்ப்பு
நல்ல விலச்சையு நாணமென் ருகு நகைமகிழ்ச்சி
எல்லையி னன்னய மு[ம்]மின்ப மேட்டை தளர்ச்சியென்ப
ஒல்கிய மாராய மோகை யிவகை யொளியிழையே. 34

320. இழைத்த வலம்வரல் கொட்புக் கறங்கல் சுழல்சுழற்சி
தழைத்த தெருமர லூகம் பிராந்திசந் தேகமையம்
விழைத்தகொல் லாசங்கை மான லனுமானம் விப்பிரமம்
பழித்த விகழ்ச்சி நகையுவர்ப் பெள்ளல் பரிபவமே. 35

321. வண்ண மணிசீ ருறுதி நயம்நன்னர் மாசறல்மாண்
பெண்ணு நற்மைநன் மையாகு மானந்த மேய்ந்தசுகம்
நண்ணு மகிழ்ச்சி யகமலர்ச் சிதொய்யல் கட்டிநயங்
கண்ணிய வுல்லாசம் வேறுஞ் சருமங் களிப்பின்பமே. 36

322. படைத்தவெய் யாமை யறியாமை துய்யறி வின்றிரிபு
கடைப்பிடி யாங்கொண் டதுமற வாமை கருத்துணர்ச்சி
நடத்துந் தெளிவு தெருட்சிதேற் றந்துணி வேநனவாம்
அடக்கமு நோன்மையு நோன்றலு மேபொறை யாயிழையே. 37

323. இடருஞர் வேதனை வாதை யரந்தை யிடும்பைதுன்பம்
படர்துயர் கேத நடுக்கங் கிலேசம் பரிதல்துக்கம்
மடிபிணி தாபஞ் சுருங்கல் முடங்கல் மடங்கிடுக்கண்
நடலைநோய் பீடை யிரக்கஞ் சிறுமை யுறுவல்நைவே. 38

324. உலம்வர லின்னல் விழுமங் கவலை யுலைவொடுகம்
பலைபுலம் பெவ்வந் துனிசூர் பருவரல் பைதல்செல்லல்

**318.** 12 முகரிகை; 19 தாமூன்றுங். **319.** 7 விலைச்சையு; 16 ஒல்லிய; 17-19 நாட்டிய மாராய மோகை. **320.** 4 கறங்கே; 8 (ல்)யூகம்; 12 மாசங்கை; 17 விகழ்ச்சி; 19 பெள்னல். **321.** 7-8 நறுமையு நன்மையு; 14 சிதொய்யில்; 18 மேலுஞ். **322.** 1 படைத்தலெய்; 5 வின்றிரிவு; 17 நுண்மையு. **323.** 8 மொடுக்கங்; 13-15 சுருங்கல் வீண்பாசறை மற்றிடுக்கண், சுருங்கல்வீண் பாசற மற்றிடுக்கண்; 18-20 சிறுமை யிரக்க மனுங்கல்நைவே. **324.** 1 அலம்வர, அலமர; 2 (ல்)தொய்யல்; 5 யழுங்குதல்கம்;

உலையுறு புன்கண்மை பையுளின் ணுங்கின்ன லோய்வினையல்
தொலைநோ தகவு வறுமைமம் மர்வெய் துறல்பீழையே. 39

325. துருமம் புலம்பு கவனம் வெறிப்பு வெதிகலக்கந்
தரும்விதிர் கம்பம் விதலை பனிப்பதிர்ப் பேநடுக்கம்
வருதித மற்குதல் நிற்றல் நிலைபேறு மன்னல்துஞ்சல்
மருவல் தெவிட்டல் கலங்க லிறுத்தல் வதிதலுன்னே. 40

326. உணங்குதல் புல்லென லோய்தல் முழுங்கல் பொலிவழிதல்
அணங்கு கவற லுயாவே வயாவே யயாவனுக்கம்
வணங்கு முசிப்பா குலமே யுயங்கல் வருத்தமஞ்சல்
துணங்கிய [ெ]ஞொள்க லழுங்கல் மடிதூங்கல் சோம்பசைவே. 41

327. அயர்வு களிமான்றல் மாழ்கல் கழுமல்மா மூத்தல்மறல்
மயலிள மைபித்துன் மத்த மனந்தர் மபக்கமையல்
இயலு மிருள்மரு ளேமாப்பு மால்தெளி வின்மையென்பர்
வியலிலம் பாடல்க லொற்கமில் லாமை வறுமையிள்ளே. 42

328. விதிர்ப்பூப் பனிப்பு வெருவுருப் பேநாம் விரைவுபிறப்
பதிர்ப்புத் துளக்கம் பயங்கா தரஞ்சூ ரணங்குவெடி
உதித்த வெறிவெம்மை யச்சங் கவலை யுலைவனுக்கம்
பொதிர்ப்புத் துணுக்கந் தெருமரல் கூசல் புலம்புபொன்னே. 43

329. பொற்புக் களுற லுவப்பே யமறல் கலித்தல்பொங்கல்
துப்பு மலர்ச்சி யதிகங் கொழுத்தல் துவன்றல்மல்கல்
செப்பிய மங்கல மும்பொலி வாந்தனி தான்புலம்பு
தப்பிலா நீங்காமை யாளுமை தண்டாமை தானறியே. 44

330. அறிவின் மிகுதியு நன்மையு மொண்மை யளவுநன்குஞ்
செறியும் பயனுட னின்பமு மாகச் சிறக்குநயம்
பொறிக ளொடுங்குதல் சாம்புதல் கூம்புதல் புன்கண்ஞொள்கல்
வெறிகொள் பழங்கண் முசிப்புச்சிக் கந்தேம் பலுமெலிவே. 45

**324.** 15 லோய்வுறுவல்; 16 துலைநோ. **325.** இச்செய்யுள் கனகசுந்தரம் பிள்ளையவர்கள் பிரதியில் மட்டும் உளது. **326.** 1 வணங்குதல்; 5 பொலி வொழிதல்; 9-10 துயர்பவெயாவனுக்கம், துயர்பு வெயவனுக்கம். **327.** 9 மனந்தல்; 15 வின்மை யென்ப; 20 வெறுமை விள்ளே. **328.** 2 பனித்தல்; 3-4 வெருக்கம்பலைமால்; 8-10 மழற்றி வெடிப்பஞர் சூர்நடுக்கம். **329.** 11 கைப்படு; 14-15 யாகுந் தனிபுலம்பாந், வாகுந்தனியுலப்பாந். **330.** 1 அறிவு; 5 யளவினன்குஞ்; 6 செறிவும்; 10 (ப்) பெறு நயனே; 11 பொறிகொ; 14 லுங்கூம்பல்; 16 மறைகொள்; 18 முசிவுசிக்.

331. மெல்லிய காசு தவறு நவைபழி மேற்கசடு
தொல்வசை யெவ்வம் வழூஉச்செயிர் மானந் தொழுவுவடு
வல்லரி லேதம் புரைகோது போக்குடன் மாசுபழு
தெல்லையில் தோமிழுக் காசவ லந்தீங் கிவைகுற்றமே. 46

332. குற்றமில் தாவு முனையுறழ் மாறு கொடியமுரண்
செற்றம் வெறுப்பிகல் தெவ்வுப் படிப்பகை யாகும்வஞ்சம்
மற்றுங் கிருத்திமம் புள்ளுவங் குத்திர மாயங்கிறி
பற்றுங் கபடம்பொய் கூடகங் கைதவம் பட்டிமையே. 47

333. மையறு கேண்மை தொடர்புகேள் நட்பு மருவுதுணை
கையொழுக் கம்பக்கங் கையடை யாகு மடைக்கலமுங்
கையற வேசெய வின்மைகை தூவாமை கையொழியா
மையென லாகுங்கை யாறெழுக் காறுகும் வாய்த்ததொன்றே. 48

334. தொண்டு முறைதொன்மை தொ[த்]து தொடர்பூர்வந் தொல்லை
பண்டு புராணம் புராதன மூது பழமைதொன்றுங் [முந்தை
கொண்டமேற் கோளாகும் பூட்கை புனிறீன் றணுமைவம்பே
மண்டு நிலையின்மை யம்மை மறுமை வருபிறப்பே. 49

335. பிறப்புச் சனிப்புச் சனனம் பவஞ்சூ தகம்பிறந்தை
மறப்பில் பயத்தலுந் தோற்றமும் யோனியு மற்றதற்காம்
இறப்பும்மை முற்பவ முந்தை யிறந்த பிறப்பதென்பர்
சிறப்பின் முறைமை மரபுபா ரம்பரை சேயிழையே. 50

336. சேய்போ தகமஞ்சு மீளி குருளைபிள் சேடுகயம்
மாய்தவி னவ்வி பருவந் தருண மழவுகொம்மை
ஓய்வில் குருகு புருக்கோ மளமுரு கோடிளமை
ஏயுங் குழவு மதற்காம் வழிபின்கா லென்றனரே. 51

337. என்றும் பொருட்டு நிமித்த நிபந்திற னேதுவுடன்
ஒன்றிய வாயினுங் காரண மாமென்ப ரோதுகந்தும்
அன்றிய வாலம் பனமும்பற் றுக்கோடா மாக்கம்பயன்
கன்று மிலாபம் பலிப்புப் பசையூதி யங்கருதே. 52

**331.** 4 நகைபழி; 8 வழூச்செயிர்; 12 யேதம்; 14 போங்குடன். **332.** 2 கூவு; 3 முனைவுறழ்; 18 ச(ா)டகம். **333.** 4-5 நட்பாகு மாலமைதி; 11-12 கைமறை யேசெய. **334.** 4 தொடர் பூற்பங்; 8-9 புராத முதுமை; 10 பழமையென்றுங். **335.** 19 ரம்பரஞ். **336.** 11 ஓயாக்; 13 புருக்கோ, பிருக்கோ; 16 ஏயாக்; 19-20 பொருமை நோனுமை யென்னே. **337.** 10 ரோதுகந்தம்; 12-14 வாலம்பனம் பற்றுக்கோடாகு; 20 யங்கருத்தே.

338. கமைதரு தாயங் கிழமைபால் பூட்சிபாங் காமுரிமை
விமலம் அமலம் புனிதம் பவித்திரந் தூய்மைசுத்தஞ்
சமைகுண மங்கலஞ் சீலஞ் சுகிர்தஞ் சுபந்தருமம்
அமைதரு கோணேயே கன்னி குமரி யழிவற்றதே. 53

339. அலகு கரணங் கணிதமு மெண்ணுகு மாதியுகம்
இலகிய மோனை துடக்க முதலிவை தோற்றமுடி
வுலவிய வந்தந்தீர் விருப்பம்வா லாமைதூய் தன்மையென்னுந்
தொலைதரு சூதக மாந்துவ்வுந் துப்பு மனுபவமே. 54

340. வண்மை கொழுமை செழுமையா ணர்மல்லல் வாய்ப்புவளம்
அண்மையில் சீத்தை சிரணஞ் சிதவு குணமின்மையாந்
திண்மை வெறுக்கை பொறிமாத் திருச்செல்வஞ் சீர்விபவம்
எண்ணுந்தே முந்தீமுந் தீனுந்தெங் குந்தித்திப் பென்றனரே. 55

341. என்றுஞ் சுவையு மமுதமுஞ் சாரமு மேயினிமை
கன்றுங் கரிலுங் கடுகமுங் காயமுங் காழ்த்தலென்ப
துன்றும் புளிப்பாம் பிலங்கைத்தல் தித்தந் தொடியோர்பலம்
ஒன்றுந் துலாமுங்காத் தூக்கமு மாநூற் றுயர்பலமே. 56

342. பற்றிய மாலை மரபிய லூழ்தன்மை பான்மைபண்பு
பெற்றி முறைமை யுழுவல் தகைபா லுரிமைபின்னுஞ்
சொற்ற நிலைமுறை நீர்மை பரிசு கிழமைதொன்மை
உற்ற விதியதி காரங் குணந்தக வோர்பொருளே. 57

343. பொருவுத லேற்ற லுறழ்தல் நிகர்த்தல் புரைதல்சம
மருளல் படியன்ன துல்லிய மேய்தனேர் மானவொப்பு
கருதிய போறல் துணைசெத் திணைதல் கடுப்புவமம்
உருவு வினைபயன் பண்பொரு நான்கா வுரைத்தனரே. 58

எட்டாவது பண்புப் பெயரியல்

முற்றும்

**338**. 2 காயம் ; 6-7 அமலம் விமலம் ; 17 கோணேயுங். **339**. 2-3 கணிதங் கரணமு ; 9-10 முதலாந் தலைமை முடி ; 11 வுலைவீதல் ; 15 தன்மையென்றுந் ; 16-18 தொலை சூதகமாகுந் துவ்வு நற்(று). **340**. 6 உண்மையில் ; 8 கிரணஞ் ; 11 திண்ணென். **341**. 2 சுதையு ; 9 காயலுங் ; 16-19 ஒன்றிய தூக்குந் துலாமுங் காவுநூற். **342**. 14-15 கிழமை பரிசுதொன்மை. **343**. 2 லொத்த ; 9 மேயுநேர் ; 12-14 போல்துணை செத்தே ரிணைதல் ; 15 கடுப்புவமை. ஒரு பிரதியில் 'பண்புபற்றிய புணர்நிலை' என்றும் பிறிதொன்றில் 'பண்புபற்றிய பெயர்த்தொகுதி' என்றும் உள்ளது.

ஒன்பதாவது

# செயல்பற்றிய பெயரியல்

344. தருமங் கிரியை தொழிலே வினைசெயல் சாற்றுவிதி
கருமந் தொறுவே தொழிற்பயில் வாமாற்றல் காண்பயிறல்
மருவல் குயிற்ற லயர்த லிழைத்தல் வனைதல்செய்தல்
பொருவில் வதுவை கடிமண மன்றல் புதுமணமே. 1

345. மண்டு தொட்டலை கெடவரல் பண்ணை கிரீடைவண்டல்
உண்டாட்டொ டோரை யுடன்பொய்தல் கேளி யொளிவளையார்
கொண்டாடல் கைதல் புனைதல் வனைத லலங்கரித்தல்
கண்டாய மண்ண லணியொப் பனைபொற்புக் கைசெயலே. 2

346. செப்பிய வேய்தல் மிலைதல் மலைதலுஞ் சூடுதல்சே
ரெப்பில் முருகு விழவுசா றுமினி யுண்டல்நுங்கல்
துப்பு நுகர்தல் மிசைதல் பொசித்த லசித்தல்துய்த்தல்
வைப்புணல் கைதொட லார்த லருந்துதல் மாந்தல்துவ்வே. 3

347. துக்க வயிறலும் பாரண மும்மதற் காந்துயிறல்
தொக்க கனவு வளர்த லனந்த லுறக்கந்துஞ்சல்
மிக்கதோர் கண்படை சொற்பனம் பள்ளியு நித்திரையாம்
எக்க லிவர்தல் பரத்தலு மேறுத லென்றுகொள்ளே. 4

348. கொள்ளுங் கபவு கரவடங் கைதொடு கொள்கையில்லாக்
கள்ளங் கபடங் கிருத்திமஞ் சோர்வு களவுவஞ்சம்
உள்ளங் கரத்த லொடுபட் டிமைகட்கை யோய்வொசிவு
வள்ளிறல் கோட லொடித லகைதல் ஞெமிர்வளைவே. 5

349. வளைவோ டிறைஞ்சல் குரங்கலுந் தாழ்தல் கலுழ்கலங்கல்
உளைவே கசித லழுங்க லிரக்க முடன்றல்சினம்
விளர்வே குரோதங் கறுப்புச் சிவப்பு வெகுளிசெற்றம்
கிளர்வேகம் பைத்தல் விடைத்த லுருத்தல் கிளிமொழியே. 6

**344**. 5 தூான்விதியே. **345**. 10 ரொளிவளையார்; 12 வைத்த; 14 மிகவு(ம); 16 கண்டாயு. **346**. 4 மலைத்தலுஞ்; 5 சூடுதல்தே(வொ); 7-8 விழவுமுருகுசா; 15 லசித்தல் துற்றல்; 16 வைப்பியல்; 20 மாந்தல் துப்பே. **347**. 4 முந்துய்த்த(லா). **348**. 4 கைகொடு; 15 யொய்யொசிவு; 19 லகைத்தல்; 20 ஞெமிர்வளையே.

350. மொழியு முனிவு கதஞ்சீற்றங் காய்தல் முணவுகலாம்
அழிவில் விளிவு செறல்கோபந் தாவ லகறலுடன்
வழுவி லிகுத்தல் குயிற்றல் குதித்தல்மேல் வாவுதலும்
தழுவிய பாய்த லுகள்தல் கடத்தலுந் தாண்ட[ற்]கண்ணே. 7

351. கடத்தல் படர்தல் சரித்தல் வழங்க லியங்கல் செல்லல்
நடத்தல் பிரிவேகல் சேறல் விடனீங்கல் நண்ணுதல்போக்
கடர்த்த லிகத்தல் தணத்த லிறத்தல் கழிவகறல்
திடத்த வுவளல் துவள லிவளல் திவளுதலே. 8

352. வல்லை முடுகல் கடுகல் கதழ்வு துனைவுவிரை
வொல்லை துருதந் துவறல் நொறிலாசு வேகமுடன்
செல்லுஞ் சபதி சடுதி கதுமெனல் சீக்கிரமாஞ்
சொல்லு முழிதரல் கொட்புந் திரிதர லுஞ்சுழல்வே. 9

353. தந்தமொர் குத்திரங் கோரங் குரூரம்போள் சண்டம்ஞெள்ளல்
வந்த கொடுமையா மீள்தல் மறிதல் பெயர்த்தலென்ப
உந்தி சுரியலு நீர்ச்சுழல் வாகும் பவனியுலாப்
பிந்தல் நெரிதரல் பாற லிரிதல் பிறகிடலே. 10

354. கிடைத்த வுராய்போத லாகு முராவுத லேயுரிஞ்சல்
படைத்தமொ ராற்றுப் படையே புலவர் வழிப்படுத்தல்
வடித்தாரை வாலாதி வீதிநே ரோடலே மண்டிலமே
எடுத்ததோர் சாரியும் வாளியு மாதியு மென்றுகொள்ளே. 11

355. என்றுங் கடத்தல் செலுத்த லுடனூக்க லேவலுந்தல்
ஒன்றிய தூண்ட லுகைத்தலோ டூர்த லொருபொருளாம்
நன்றியல் நண்ணல் குறுக லெதிர்தல் நணுகலொட்டல்
ஒன்றுதல் சார்த லணைத லணுகலென் றோதினரே. 12

356. திருத்தல் சுமத்த லெடுத்தல் தரித்தல் பொறுத்தல்செப்பிற்
பரித்தல்மீக் கோட்லுந் தாங்குத லாகுமுற் சாகம்பற்றுள்
உரித்தான தாளாண்மை யாள்வினை யூக்க முஞற்றுயபற்றல்
வருத்த முயற்சிதா ளாள்வினை தேட்டமும் வைத்துரையே. 13

**350**. 1 மொழிவு; 5 முணவுதலாம்; 6 இழிவில்; 13 குயிறல்; 20 தாண்டு தலே **351**. 15 பெயர்த்தலுமாந்; 16-18 திடத்தல் துவளல் திவள. **352**. 3 கடுக்கல்; 8 துவரல்; 12 சடிதி, சமதி; 19-20 (ஞ்) சுழல்வு திரிதரவே. **353**. 1-7 தந்தபுத்தேள் கடியாணர் புறையுணர்தான் விருந்து-வந்த நவம் வம்பு; 11 உந்து; 16 பின்றல். **354**. 10 வழிபடுத்தல்; 12-14 வீதிநே ரோடலாம் வாலாதி; 15 மண்டிலமோ(டே). **355**. 5 மேவலுந்தல். **356**. 8 (ம்)ஏந்துத; 10 சாமம்பற்றுள்; 15 முயற்று ஞற்று; 16 வரித்த.

357. துய்ய வுசாத்தேர்ச்சி சூழ்ச்சிநா லெண்ணஞ் சொலாக்கிளவி
வெய்யதொர் நீங்குத லூராண்மை பேராண்மை மிக்கசெயல்
ஐயமில் சிந்தித்தல் தெள்ளுதல் தூக்கொப் பறிவொடுள்ளல்
உய்ய நினைதல் தெளிவாய்த லாராய்த லூகித்தலே. 14

358. ஊக்கிய நாடலு நேடலுங் கையரிக் கொள்ளலுமே
ஆக்கிய தேடலாம் வேயொற்ற லொற்றுமை யாங்குறிக்கோள்
நோக்குங் கணித்தல் குணித்தல் வரையறை விற்றல்நொடை
தூக்கும் பகர்தல் விலைபண்ட மாற்றென்பர் தூமொழியே. 15

359. தூவுதல் வண்மை யளித்த லிகுத்த லருளுதவி
வேள்வி புரத்தல் வழங்கல் கவிகைவே ளாண்மைதரல்
பாவுப காரம் பொழிதலே யீதல் பணித்தல்நல்கல்
தாவில் தியாகங் கொடையீகை வீசலுங் தானமுமே. 16

360. தாபமி லோமங் கிருதுவோ டெச்சமி யாகமிட்டி
யூப மகம்வேள்வி போற்றலு மோம்பலும் பாதுகாத்தல்
ஆபந் தருதலைக் காவல் மிளையாங் கவவகத்தீ
டேபந் தணைவிரல் மாதே தெவவுக் கொளற்பொருட்டே. 17

361. பொருந்தும் பலியையம் பாகஞ் சரியை நிரப்புப்பிச்சை
வருந்திய வந்தனை தாழ்த லிறைஞ்சல் வணங்கல்தொழல்
அருந்திறற் பூசை வழிபா டருச்சனை யாராதனை
பரிந்தறல் வாய்த்தல் கிடைத்தல் பயத்தலு மெய்தலுமே. 18

362. எய்தும் பயத்தலும் பூத்தலு முண்டாதல் நீத்தலொரூஉ
வெய்ய துறத்த லிணைவிழைச் சுப்புணர் வேநுகர்ச்சி
ஐய துமித்தல் பிளத்தல் துணித்தல் வகிரறுத்தல்
பைய வரிதல் அடிதல் பகிர்தல் பரிதலுமே. 19

363. பறித்தலே குற்றல் களைதலே கட்டல் பகைதணித்தல்
ஒறுத்தல் நெருங்குதல் காதுதல் தீர்த்த லொழித்தல்கொல்லல்
செறுத்தல் முருக்குதல் தேய்த்தலு மாங்கது வாய்வடுவாம்
மறித்தும் வரண்டல் கொழித்தல் வரன்றலும் வாருதலே. 20

**357.** 5 சொல்லாக்கிளவி; 7 நீக்குத; 14-15 லோரிதலகாற லுள்ளல்; 18-19 தெளிதலூக் காராய்த. **358.** 9 லொற்றிமை; 16 தூக்கம்; 20 தூய வரே. **359.** 4 விடுதெ; 15 பனிற்றல் நல்கல், பணித்தல் நல்கல். **360.** 14 இளையாங். **361.** 16 யிருந்திறல். **362.** 6 நொய்ய. **363.** 5 பகை தணத் தல்; 13 தேய்தலு; 17 வறண்டல்.

364. வாய்ந்த வர[ன்]றல் தெரித லுவளித்தல் வாய்மைசெயல்
ஏய்ந்த கவர்தல் குடைதல் ஞெளிதல் கடைதலென்ப
காய்ந்து சவட்டல் செகுத்தல் சிதைத்தல் நெரித்தல்கைத்தல்
ஆய்ந்து செறுத்தல் தடிதல் லவித்த லழித்தலன்றே. 21

365. அடுத்தலே கூடுத லாறலை யாகும் வழி[ப்]பறியுந்
தொடுத்தநற் சூனுதல் சூழுதல் தொட்டலே தோண்டலென்ப
விடுத்தல் குயிற்றுதல் தோள்தல் துளைத்தல்மீ தூர்நெருங்கல்
கடுத்தல் சிதர்தல் தகர்தலுஞ் சிந்துதல் கண்டனரே. 22

366. கண்டு[தி] யாகுந் தினவே யொறுத்தல் கடிதல்மிறை
மிண்ட லலைத்த லேதிர்த்த லடனஞ் செறலுலைத்தல்
தண்டுதல் வேதனை கைத்தல் வருத்தல் தடிதல்வெட்டல்
கொண்ட வடுத லணங்கல் படுத்தல் கொலைவீட்டலே. 23

367. வீடல் முடித லுலத்த லிறத்தல் விளிதல்விடல்
வாட லொழிதல் தபுதல் வறல்சாதல் மாய்தல்பொன்றல்
நீடவி தல்மாள்தல் வீய்தல் படல்துஞ்சல் நேர்மடிதல்
கேடும் விபத்து மவத்தையு மாபத்துங் கேட்கிலொன்றே. 24

368. ஒன்று முலைத லுருங்க லழிதலா மோய்தலெஞ்சல்
குன்றல் தவல்சிங்க லொற்க மிழுக்கமுங் கொள்தளர்ச்சி
வென்றிசெய் புய்த்தலே யுய்த்தலும் வீற்று விபத்திவிள்ளல்
சென்றியல் பேதுறல் வேற்றுமை வேறு படல்திரிபே. 25

369. திருத்திய சுற்றுதல் சூழ்தல் வளாவல்சூழ் போதல்முற்றல்
வரைத்தல் வளைதலுங் கோலல் நிணர்தல் வலத்தலென்ப
உரைத்த விசித்தல் சிமிழ்த்த லிமிழ்த்த லசைத்தலுடன்
நிரைத்த பிணிப்பார்த்தல் வீக்கல் சுருக்கல் நிறுத்தனரே. 26

370. நிறுத்த தொடர்பு தொடுத்தல்யாப் பார்த்தலே நீள்வலித்தல்
உறுத்தலுங் கட்டுதல் தீர்தலே தீர்த்தல் விடற்பொருட்டாம்

**364.** 4 லுவனித்தல் ; 5 வாய்மைச் செயல் ; 14-15 சிதைத்தல் சேதித்தல் கைத்தல் ; 18-20 தடித்தலாம் வீய்த்த லழித்த லென்னே. **365.** 6 கொடுத்த நாற் ; 13 தொள்கல் ; 16 கடுத்த ; 20 கண்டனனே. **366.** 3-5 தினவு கடித லொடித்தல் மிறை; 6 மிண்டி(ய) ; 10 செறலுலைதல்; 17-18 சேதித்தலடுத்தல். **367.** 11 நீடுவீ ; 13-15 வீய்தலுந் துஞ்சலு நேருமென்ப. **368.** 12-13 பூய்த் தலே புய்த்தலும் ; 15 விபத்துவிள்ளல் ; 20 படல்திரிவே. **369.** 2 துற்றுதல் ; 7 வளைத்தலுங் ; 8 கொல்லல் ; 10 அலைத்தலென்ப, வலித்தலென்ப ; 11 உரைத்து ; 19 சுருங்கல் ; 20 நிறுத்தலெள்ளே. **370.** 5 நீள்வரித்தல் ; 7 கூட்டுதல் ; 8-9 தீர்தலெதிர்த்தல்.

மறுத்த சுலாவலே சுற்றுதல் வாரித்தல் வாரணமுங்
குறித்த தடைமாற்றம் நாடழி வேகொற்ற வள்ளையென்னே. 27

371. வள்ளிய வெம்முனை மொய்படல் ஞாட்பு மலைதல்தெவ்வர்
கொள்வினை மாறு முரண்சமர் நேர்தல் குறும்பிரணந்
தெள்ளிய வார்ப்பு நிகர்ப்பிகல் பூசல் செருவுடற்றல்
தள்ளுஞ் சமதியோ டாகவ மாயோ தனஞ்சமமே. 28

372. சங்கிரா மந்தும்பை தாக்க லெதிர்தல் சமீகமமர்
பொங்கு கலக மெதிர்த்தலோ டாடலும் போரென்பரால்
தங்கிய சாய்ந்தார்மேற் செல்லாமை யாகுந் தழிஞ்சியென்ப
எங்கு மளித்தலும் பெய்தலும் பாதீடா மென்றனரே. 29

373. ஆவித்தல் கொட்டாவி யாகு மயாவுயிர்த் தல்வருத்தம்
ஓய்வித்தல் காய்தல் முளிதல் வறத்தல் புலர்தலுமாந்
தூவல் பிலிற்றலும் பில்தலு மல்கல் சொரிதலெக்கல்
தாவிப் பொழிதல் பணித்தலோ டீர்த்தலுந் தாழ்குழலே. 30

374. குழன்மொழி யொட்டல் வலித்தலே நேர்த லுடன்படலாம்
பொழுதுநீட் டித்தல் நெடித்தலும் பாணித்தல் பொற்புடங்கே
ஒழிவி லொருங்காகு மொற்ற லுறுத்த லுணர்த்தலெற்றல்
அழிவி லெழுப்ப லெடுப்பல் கயக்குச்சோர் வென்றுரையே. 31

375. உரைக்கி லியைபே புணர்ச்சி யிசைப்பிசை யேபிறக்கு
வரைப்பில் வழுவாகு மூய்தல் கவித்தலு மூடுதலாம்
முருக்கிய மூழ்த்தலு மூசலு மூஞ்சலு மொய்த்தலென்ப
சுருக்கு மரச ரிறைதிறை யுல்கு பொருள்சுங்கமே. 32

376. கறையுங் கரமுங் கடனுங் குடியிறை யேகலித்தல்
நிறையுங் கஞறல் கஞன்றலே பம்பல் நெருங்கெழுச்சி
அறையு மிலிர்த்தல் தளிர்த்தலர் பூத்த லணைதலொன்றல்
உறைதல்தோய் வேசார்வு புல்லல் படிதல் புணர்தலொன்றே. 33

**371**. 15 செருவுடல்தல்; 17 சபதியோ. **372**. 7 கவிக; 12 சார்ந்தார் மேற்; 18 பெய்த்தலும். **373**. 6 ஓவித்தல்; 8-10 முளித்தல் வறுத்தல் வறல் புலர்வு; 8 முனிதல்; 10 புலர்த்தலுமாந்; 12 பிளிற்றலும்; 18 பனிற்றலோ; 18-19 பனிற்ற லொடிதலுந்; 19 டீர்தலுந்; டீதலுந். **374**. பின்னிரண்டு அடிகளும் அடுத்த செய்யுளின் முதலிரு சீர்களும் சங்கத்துப் பிரதியிலும் ஐயரவர்கள் பிரதியிலும் இல்லை. 3 வலித்தல்பின்; 8-9 கிரீடித்தலும் பாணி; 10 பொற்பிடங்கே, பொற்படகே; 12 லொழுங்காகு; 16 அழுவி. **375**. 3 யுணர்ச்சி; 5 யேயிறக்கு; 15 மொய்த்ததென்ப; 17-18 மரசிறை திறைகறை. **376**. 5 யாங்கலித்தல்; 7-9 கஞறலே பம்பலணவல்; 20 புணர்த்த லொன்றே.

377. ஒன்றுத லண்ணுதல் நண்ணுதல் கூட லுடன்மருவல்
என்றிவை யாவும் பொருந்துத லாகுங் கலாவல்துழா
அன்றி யளாவலு மாகுங் கலத்தல் துவருதலுஞ்
சென்று திமிர்தலும் வக்கிர மாவருஞ் செய்தியதே. 34

378. செய்யும் வருட்டல் தெருட்டலு மாம்வற் புறுத்தல்செப்பில்
தைவரல் நீவல் தடவல் வருட லுருத்தலுடன்
மொய்வரல் நாறல் பொடித்தல் பொடிதல் முளைத்தலென்ப
வெய்ய வெதிர்தல் மலர்த லலர்தல் விரிதல்பற்றே. 35

379. பகரு மிகுதலே வீழ்தல் மிளிர்தல் மறிதலென்பர்
இகலு மமர்தலும் வீழ்தலு மேவ லணவலெட்டல்
புகல்தகு மொல்லல் சிவணல் பொருந்துதல் கூடுதலாம்
அகலுஞ் சிறைசேம மேமங் கடிகட் டரண்கதவே. 36

380. கதுவிய மாலை செயல்நடை நீழல்கை யாறியல்போ
டுதவு சரிதை யொழுக்கம தாகு மியோகமொன்றல்
மதிதரு வேகங் கடுமை வியோக மகறல்மற்று
நிதிதரு செய்கட ஞகு நியம நியதியுமே. 37

381. நிருத்தம் நடம்நட்டம் நாடகங் கண்ணுள் நிலையிலையம்
திருத்திய தாண்டவ மாடல் படிதம் பரதஞ்செப்பில்
அருத்திய பாணி குரவைகூத் தாடுதல் தூங்கலுமாம்
பரித்தநல் லுழ்த்தல் பதனழி வாஞ்செவ்வி யும்பீகரே. 38

382. கரணமே பித்த மலைப்புப் பவுரி கடகங்கித்து
பரியமுள் ளாளங் குனிப்புவீ ரட்டானம் பத்துமதற்
குரிய விகற்ப மணங்கு வெறிகழங் காடல்சொல்லில்
அரியன வேலனுட் டாவல மார்த்துவாய் தட்டுதலே. 39

ஒன்பதாவது செயல்பற்றிய பெயரியல்

முற்றும்

**377.** 4 கூட்ட; 10 கழாவல் துழால்; 15 துவிருதலுஞ்; 17 திமிர்த்தலும் நிமிர்தலும். **378.** 17 வெதிர்த்தல். **379.** 10 லணவலொட்டல்; 11 புகல்தரு; 19 கடிக்கட்; 20 டாணத்தவே. **380.** 5 யற்றுச் செய்த(லு); 7 சரிகை; 9 தாகுமென்; 15 மமறல் மற்று. **381.** 5 நிலைமலையம்; 6 வருத்திய; 10-11 பரதபற்றுங் அருத்திய, பரதபற்றுங் அருக்கிய; 12 வாணி; 14 தாலுதல். **382.** 1 கரணமொ; 2 பித்தல்; 5 கடகங்கிது; 7 ளாகுங்; 9-10 ரட்டமுங் கூத்தி னுக்கே(யு); 15 காடல் சொல் லற்(க).

பத்தாவது

## ஒலிபற்றிய பெயரியல்

383. தந்த மொழியும் பனுவலும் பேச்சுந் தனியுரையு
முந்து கிளவியும் வாக்குநல் வாணியு மாற்றமுடன்
வந்தியல் கூற்று மிசையும் வசனமும் வார்த்தையுஞ்சொல்
அந்தமில் வாய்மை சரதந் திடமுண்மை யாணையுமே. 1

384. ஆயும் பகர்தல் குயிறல் வழங்க லிசைத்தல்சொற்றல்
ஏயும் புகறல் விளம்ப லுரைத்த லியம்பல்செப்பல்
காயுங் கிளத்த லறைதல் மொழித லுரைத்தல்மிழற்
றேயு நிழற்ற விறுத்தலுங் கோதலு மோதுதலே. 2

385. ஓதி யறிவு கலைகேள்வி சால்பு மு[று]திகல்வி
மூதுரை யாகு மொழிமை கதைகா ரணக்கிளவி
ஆதி நெடுமொழி தன்மேம்பா டோத லசைநிலையாங்
கேதலே யுங்குரை யும்பிற வும்மா மிசைநிறையே. 3

386. இன்னுமற் றும்வற்று மக்குமிக் கு[ம்]மம்மு மொன்னுடனுன்
அன்ன கிளவி யனைத்துமாஞ் சாரியை யவ்வுமிவ்வு
முன்னுவ்வு முச்சுட்டா மாவேயோ மாற்ற மொருமூவினத்
தன்னியல் காரங் கரங்கான்மா னக்கரச் சாரியையே. 4

387. சாற்று முதாரண மேது விலக்கியஞ் சாலுமின்னும்
ஆற்றிய ஞாபகத் தோடு பிசியு மரும்பொருளாம்
ஏற்று மியாகா பிறமதி சின்மின் னிகுமெனவே
தோற்றிய யாவையு முன்னிலைக் காமசைச் சொல்லென்பரே. 5

388. சொல்லுஞ் சருக்க மிலம்ப மெனுமிவை தொல்விருத்த
மல்கு நடையன காகுளி மந்த விசையினிமை
புல்லு மிராக மிடக்கர் மறைத்துரை போலசைபோல்
பல்லிய மேவிய பாடல்சங் கீதமாம் பைங்கொடியே. 6

**383.** 5 தணியுரையு; 6 முந்துங்; 10 மாற்றமுடன். **384.** 7 பகற; 16 றேயு. **385.** 5 முதியுங்கல்வி; 11 யாய்தி; 20 மிசைநிறைவே. **386.** 2 றும்மதலு; 10-12 யன்னுமின்னு முன்னுமுச் சுட்டாகு; 11-12 முன்னுமுச் சுட்டாகு; 15 மொருமூவினத்; 18-19 கரங்கான மோனமுஞ், கரங்கான மானமுஞ். **387.** 5 சாலமின்னும்; 9-10 பிசிதியு மப்பொருளா. **388.** 7 நடையின; 10 விசையினிறை; 15 போலசையோ(ட); 20 பைந் தொடியே.

389. கோதி னுவறலும் பன்னலுஞ் சாற்றலாங் கொள்கவறு
சூது படிறு மடிமாயம் வக்கிரந் தோம்பளிதம்
தீது சடஞ்சலம் விச்சித்தம் வஞ்சஞ் சிறுமைகள்ளங்
கோது கபடம்பொய் கைதவம் யாவுங் கொடுமைசொல்லே. 7

390. சொல்லுங் குறளை பிசுனமுங் குஞ்சமுஞ் சூழ்கொடுவாய்
செல்லும் புறங்கூற லாசிவாழ்த் தேதே சிகந்திசைச்சொல்
புல்லும் பழிச்சல் பரவுத லேத்தல் புகழ்தல்துதி
பல்கும் பரசல் வழுத்துதல் போற்றுதல் வாழ்த்துதலே. 8

391. வாய்த்தீமை கௌவை யலரம்ப லேச்சு வடுமொழியாஞ்
சீர்த்தி யொளியிசை மீக்கூறு மேம்பாடு சீரொடொண்மை
கீர்த்தி புகழ்வண்மை கொற்றமுந் தாளவொத் தாஞ்சதிசேர்
சீர்த்த கடைப்பிடி யோர்ப்புங் குறிக்கோளுந் தேற்றமுமே. 9

392. தேற்றமே மன்றமற் றென்னுங் கிளவி கழறலுடன்
சாற்றி யிடித்த லுறுதிச்சொல் வஞ்சினஞ் சூள்சபதந்
தேற்றமுஞ் சூளுற வாகும்வா ளாமைபே சாமைவாய்ப்புள்
ஏற்ற விரிச்சியு நற்கோள் நிமித்த மெனவுரையே. 10

393. உரைசெய் விளித்த லுளைதலே கூவல்வா வென்றலுடன்
கரைத லறைகூவல் போர்க்குவா வென்று கனன்றழைத்தல்
விரைவு முகனமர் வேநன் னயமுப காரம்வினா
வரைவில் கடாவிடை யாமதற் கான மறுத்துரையே. 11

394. துன்றிய வன்றென் கிளவியு [மின்றென் கிளவியுமா]
மென்ற கிளவி மறுத்தலு மாமென்னை யென்கொலெது
நின்ற வெவனேதி யாதியா வென்ன நிகழ்த்துமையம்
அன்றியு மாங்குடன் யாண்டு மிடத்தைய மாமென்பரே. 12

395. எழுதாத கேள்வி சுருதி மறைசாகை யேயாதிநூல்
பழுதி லுபநிட மாரணம் வேதம் பனுவலுடன்
அழிவில் பிடக மதிகாரந் தந்திர மாரிடநூல்
தழுவு கலைவிதி யாகம மோத்துடன் சாத்திரமே. 13

**389.** 6 சூதும்; 11 காது. **390.** 3 பிசினமுங்; 5 சூழ்தொடுவாய்; 8-9 லாசிடை வாழ்த்துத்தே. **391.** 3 யயலம்ப; 13 தோற்றமுங்; 19 கடைக் கோளுந். **392.** 2 மன்றமா; 12 சூளற. **393.** 7 லறைகூறல். 393, 14 முதல் 394, 5 முடியச் சங்கத்துப் பிரதியிலும் ஐயரவர்கள் பிரதியிலும் இல்லை. **394.** 9 மாமென்ன; 19-20 மிடத்தினை யாமென்பரே. **395.** 17 தலைவிதி.

396. சாற்றிய செய்யுட் கவிபாட்டுத் தூக்குக் கவிதைசந்தம்
போற்றிய யாப்புத் தொடர்பிவை பாவென்ப பொற்பிசைப்பாக்
கூற்றியல் கீதம்பண் பாணி வரிகானங் கோடணைபாண்
மேற்றிகழ் காந்திரு வங்கேயங் காமர மெல்லியலே. 14

397. மெல்லிய தந்திரி யோடெழா லாகு நரம்பினிசை
சொல்லும் பிளிறல் குளிறல் பிரற்றல் சிரற்றல்மருள்
ஒல்லும் பயிற லரற்ற லுளைத லெழுத்திலொலி
புல்லுந் திரிய லழுங்கல் குரைத்தலும் பூசலுமே. 15

398. சலித்தல் நரல்தல் துவைத்தல் கரைதல் தழங்கல்பம்பல்
கலித்தல் முரலோசை யாகுலங் கோலா கலந்திமிலம்
வலித்த தமரந் தெழித்தலே நூறல் மருளல்ஞெள்ளல்
ஒலித்த விரங்கல் கறங்கல் முழுங்கலென் றோதுவரே. 16

399. ஓதுஞ் சிலம்ப லிசைநாதங் கம்பலை யோடிரங்கல்
போதும் படுத லிரட்டல் துழனி புலம்பல்சும்மை
ஓதந் துவனி யுடனுர வாரந் துவன்றலொய்யார்ப்
பேதந் தருமோசை பொம்மெனல் கல்லென விம்மெனலே. 17

400. இழுமெனல் கல்லெனல் பொல்லெனல் பொள்ளென லின்னுஞெள்
விழுமிய விண்ணெனல் பம்மெனல் பூரெனல் வேறுஞெரேல் [ளல்
எழுதரு மோசை யெவையு மனுகர ணம்மென்பரால்
அழிவொன்றிலாத வனைத்துங் கெயாதரத் தாய்ந்துகொள்ளே. 18

401. ஆசு மதுரஞ்சொற் சித்திர வித்தார மாங்கவிநான்
கேசில் புலவர் கவிகம கன்வாதி வாக்கியென்பர்
மாசில்வெண் பாவா சிரியங் கலிவஞ்சிப் பாமருட்பா
வீசு மினந்தா ழிசையுந் துறையும் விருத்தமுமே. 19

402. மேவு மரும்பொரு ளந்தாதி கேட்டிந்த மேதினியோர்
தாவும் வினைகெடச் சாற்றிய தென்றமிழ்த் தேவைமன்னுங்

**396.** 9 பாவென்க ; 10 போற்றிசைப்பாக் ; 15 கோடணைபண் ; 17 கந்திரு, காந்தரு. **397.** 8 களிற்றல் ; 15 லெழுத்திஞெலி, லுறுகாலொலி ; 17-18 திரிதி புழுங்கல் ; 19 குரைதலும். **398.** 4 கரைத்தல் ; 7 முரலோதை ; 14 நாறல் ; 17-20 (ல்) கறங்கல் முழங்கல் தழங்கலென் றோதுரையே. **399.** 15 துவன்ற லொல்க(லே) ; 18 பொல்லெனல். **400.** 2 அல்லெனல் ; 3 பொம்மெனல் ; 5 லென்னு ஞெள்ளல், வின்னுஞெரேல் ; 8 பும்மெனல் ; 9 பூரெனல் ; 10 வேறு ஞரால். **401.** 6 பேசும் ; 18 ழிசைசெந். **402.** 4 கேட்டந்த ; 9 கோன்றமிழ்த்.

கோவை யிராமீ சுரக்கோவை சொன்ன குருபரன்மற்
றேவுத லின்றி யமைத்தான்பத் தாவ தொலியியலே. 20

403. இயற்சொற் றிரிசொற் றிசைச்சொல் வடசொல் லெனவுமற்றும்
பெயர்ச்சொல் வினைச்சொ லிடைச்சொ லுரிச்சொ லெனப்பெயர்த்
கயற்சொல் விரவாம லாறு விகாரத்தி னுலமைத்த [தாங்
செயற்கை யறிந்தக் கடைத்து மியற்கை தெரிவரிதே. 21

பத்தாவது ஒலிபற்றிய பெயரியல்
முற்றும்

**403.** 10 லெனப் பெயர்த்தங்.

டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் பிரதி இதனோடு முடிகிறது. இறுதியில் ‘திருஞான முத்திரை துணை உ வெங்கடாசலபதி துணை. அழகிய மணவாளன் திருவடிகளே சரணம் உ குருக்களய்யங்கார் திருவடிகளே சரணம் உ. பெரியதிருவடி ரெற்றினகவிராய குருவே நம உ. கூாசுமக ஞூபராபவ வருடம் சித்திரை மாதம் 4உ வியாளக்கிழமையும், பௌஷூரணையும் சோதி நட்செத்திரமும் பெற்ற சுபதினத்தில்க் கெயாதர நிகண்டு எழுதி முற்றியது. வகுழபூஷணபாற்கரோதயன் திருவடிகளே சரணம். கருடாய நம உ’ என்று காணப்படுகிறது. மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பிரதியும் இவ்வியலோடு முடிந்துவிடுகிறது.

பதினோராவது

## ஒருசொற் பல்பொருளியல்

404. அரிகடல் மால்பன்றி யாயுதம் பச்சை யளியருக்கன்
எரிபுகை கிண்கிணி பெய்பர லேம்மை யமன்கிளிகண்
வரிவலி யிந்திரன் மாருதம் நேமி மடங்கல்மது
பரி[ப]கை செங்நெற் கதிர்தேரை வானரம் பாம்புபொன்னே. 1

405. பொன்னே யிரும்பு சுரர்குரு மாடை பொலிவுதிரு
என் ; ஏர் அழகு முழுபெற் றமும் ; எல் ஒளிபகலாம் ;
தென்னே வனப்பு மிசைபாட லுந்தென் றிசையுமென்ப ;
கோன்னே பெருமை பயனிலி யச்சங் கொளும்பொழுதே. 2

406. பொய்யிலா வாரணம் கோழிசங் கானை தடைகவசம் ;
தோய்யில் மகிழ்ச்சி யழகோர் புதல் ; தோய்யல் சேறுதுயர் ;
மையாடு மேகங் கறுப்பஞ் சனங்குற்றம் ; வாளொளிவாள் ;
கைசார் பொழுக்கஞ் சிறுமை படைக்கை கரமுமொன்றே. 3

407. ஒன்றிய தாரை விழிகூர்மை காளநே ரோட்டமழை ;
கன்று வளையிளை தானவை ; ஆயுங் கரியிருந்தை
என்று நடுத்தந்தி ; ஏறுதல் மேற்கோட லில்லலுமாம் ;
வன்திறங் கூறுபா டுக்க மிசைத்திறம் வாணகையே. 4

408. வாலாகுந் தூய்மை யிளமை மிகுதி ; மறம் கொலையுந்
தோலாமை யோடு சினமுங் கொடிய தொழிலுமென்பர் ;
பாலாம் பகுத்தல் திசையிடம் பக்கம் பயமியல்பும் ;
காலாகுங் கால்தூண் மகவிடம் வாய்க்கால்தாள் காற்றாற்றமே. 5

409. காவே நிறைபொழில் கற்பகந் தொன்மரங் காவுதண்டு ;
பாவே யிசைப்பா வியற்பாப் பிரத்தல்நூற் பாபாவுதல் ;
கோவே [மன]ன்திக்கு நாட்டங் கிரணங் குலிசநன்னீர்
ஆவே சுவர்க்கம் வியங்கோ ளுரைபுவி யாசுகமே. 6

410. ஆசு சிறுமை விரைவோர் கவிகுற்றம் மார்கவசம் ;
மாசிலா [வேல]ா வலையம்பார் வீரை ; மகம்வேள்விநாள் ;
காசு மணிவடங் குற்றம் ; கமலம் சலம்பதுமம் ;
வாசம் இடமு மணமுந் துகிலு மலர்க்குழலே. 7

**405.** 6 ளென்னே ; 13 மசைப்பாட. **406.** 14 சளங்குய்யத்தம். **407.** 15 வில்லையுமாம் ; 20 வாணிரையே. **408.** 8 தினமுங் ; 20 காற்றுற்றமே.

411. குழலா மயிர்வேய்ங் குழல்; ஆவி வாவி புகையுயிராம்;
தழலாங் கிளிகடி தட்டையுந் தீயும்; தடிதடியூன்;
நிழலாங் குளிர்ச்சி மரக்கோடுஞ் சாயையு நீடருளும்;
கழலாந் தொடுதோல் கழங்கு கனைகழற் காலடியே. 8

412. காரிகை யேரு மொருநூலும் பெண்ணுங் கலித்துறையும்;
வாரி புதவு வருவாய் கடல்நீர் [வர]ல்வழிநூல்;
பாரி பரியங்க மோர்வள்ளல் நல்லாடை பார்மனையாள்;
சூரி வடுகன் சனிசாத்த னோடு கடுவள்ளலே. 9

413. கடுநஞ் சரீதகி முள்; முசு மானேறு காலநுட்பம்
உடுபதி சேகு வயிர்கல்வி புல்வா யுடைகலையாம்;
படுதல் இன் றுதலுண் டாத லொலி; பச்சை பச்சைபுன்றோல்;
உடுவே மரக்கோலுந் தாரா கணமு முரைபல்குமே. 10

414. பல் இசை வண்மை யிசைப்புரை யாடலும் பாடலுமாம்;
வில் ஒளி கார்முகம்; வேயோற்று மூங்கில் துளைவேய்தலாம்;
வல்வலி சூது விரைவாகும்; வையம் தேர் வாழ்புவனம்;
புல்லாகுங் கம்பு புறக்காழ் பொலிவின்மை புற்புல்கலே. 11

415. கஞ்சம் கலம்பங் கயங்குல்லை யப்பம்; வேள் காமன்செவ்வேள்;
தஞ்சம் எளிமையும் பற்றுக்கோ டும்; தா வலிவருத்தம்;
துஞ்சல் உறக்கமுஞ் சாவு நிலைபேறும்; தோண்டை கண்டம்
விஞ்சிய கொவ்வையு மாதொண் டையுமென் விரைக்குழலே. 12

416. விரையே பரிமளஞ் சாந்துமாம்; வேலை பொழுதுதொழில்
குரைசேர் கடலும் கரையும்; கவலை கொடிசந்திநோய்;
மரைமரை தாமரை மண்டூகம்; மீளி விடலைவலி;
புரைபுரை யொப்புயர் பில்லம் பழுதென்பர் பூண்முலையே. 13

417. முற்றுதல் காழ்கோட்டல் சூழ்போதல் யாவு முடிவெய்தலும்;
குற்றல் பறித்தல் குறுதலாம்; வண்மை கொடுத்தல்புகழ்;
கற்பம் சுவற்கம் பிரமாயுக் கற்பகம்; கான்மணங்கான்;
பொற்பே பொலிவு மழகும்; மால் மேகம் பொருப்புவிண்டே. 14

418. விண் தொனி வான மழை; குழை காதணி சேறுதழை;
தண்டு சிவிகை வரம்பு பெரும்படை தண்டுதண்டம்;

**411.** 1-3 குழிலாமயி-ெ-வளயாவி. **413.** 2 சரீததி. **414.** 1 பல் திசை; 17 கண்பு. **417.** 8-9 குறுகுத லாம்வண்மை.

தோண்டு வழிபாடு கொண்டை பழமை தொழும்பொடோன்பான்;
கோண்டல் மழையுங் குணதிசைக் காற்றுங் குறித்தறியே. 15

**419.** குருவிரு மாத்திரை யாசா னிறமிகு கோள்பெருமை ;
குருகு இள மைகை வளையுலை மூக்குக் குருக்கத்திபுள் ;
பொருநர் தலைவருங் கூத்தரும் போர்ப்படை வீரருமாம் ;
தருமன் இயமன் சுகதனு மிந்திரன் முனுமென்னே. 16

**420.** தானம் சுவற்க மதங்கொண்ட நீராடல் சார்பிடமாம் ;
மானம் பெருந்தன்மை குற்ற மளவு வருமிலைச்சை ;
கானம் இராகமுங் காடும் ; கதிர்கதிர் பானுமதி ;
வான் அம் புதமும் வலியும் பெருமையும் வானமுமே. 17

**421.** வாரம் கரைசார லன்பு கிழமைசெவ் வாரம்வைப்பாம் ;
ஈரம் குளிர்ச்சியன் பென் ; க[ர]ம் கைநஞ் சிறைகழுதை ;
பாரம் புவியுங் கரையு நிறையும்வன் பாரமுமாம் ;
கார் அம் புதநீர் கருமை கருங்கவி கார்காலமே. 18

**422.** காணம் தனஞ்செக் களவு பரியூண் ; கறையுரலே
பூணுங் கருமை திறைசோரி ; பூவைகா யாவொருபுள் ;
தூணம் பகைதூண் ; விறப்புச் செறிவு வெரூஉப்பெருக்கம் ;
தாணு நிலைபேறுஞ் சத்தி தூ ணீசனுச் சாலவையே. 19

**423.** சாலம் விசால மராமரங் கூட்டங் கயிற்றுவலை ;
கோலம் அழகொப் பனைபன்றி கூத்திற்பல் கோலமுமாம் ;
மூலம் கிழங்கு மொருநாளும் ; பாலம் நுதலிசைப்பாம் ;
நீலம் குவளை யிருளோர் மணிநிற நீள்பெண்ணையே. 20

**424.** பெண்ணை பனையோர் நதியும் ; மதிவிதுப் பேரறிவாம் ;
தண்ணடை நாடு நகரும் ; வறிது சிறிதருகல் ;
வண்ணம் நிறங்கவி யோசை வனப்பொப் பனைசெயலாம் ;
எண்ணிய கோடு கரைசங்கு தந்தங்கம் பேந்திழையே. 21

**425.** ஏமமே காவல்பொன் னேமாப் பிரவு மயக்கமின்பஞ்
சேமமு மாகும் ; செழுமை வளனுங் கொழுப்புமென்க ;
தாமம் ஒழுங்கொளி தார்கொன்றை ; சாந்தம் கமையுஞ்சந்தும் ;
வாமம் ஞூறங்கிடப் பாகங் குறளும் வனப்புமென்னே. 22

**418**. 13 கொண்மை. **419**. 4-5 னிறமிருகொன்பெருமை. **421**. 19 தருங்கவி. **422**. 4 பரிபூண் ; 8 நிறைசோரி ; 12 பசைதூண் ; 18-19 சாததிதி தூணீசனுய்ச். **424**. 19 பந்தங்கம்.

426. வனம் உதங் கான[ம்] வனப்பாம்; மதன[ம்] வருத்தமும[ர்]த்
தனமும்; பலிநீறுங் தெய்வ வுணவோடு தாருவுமாம்;
தனமே கனதன முன்னிரை சாமீ கரமுமென்; அஞ்
சனமே யெழுதுமை யோர்திசை யானையோர் கற்பிறப்பே. 23

427. பிறங்கல் பெருமை யுயர்ச்சி யிறை; பேர் பெருமைபெயர்;
கறங்கல் சுழற்றி வளைதடி பேயொலி; கம் தலைவான்
நிறங்கொள் சலிலம் பிரமன் சதாகதி; நேமிவட்டம்
அறங்கொள் திகிரி[யே] யோ[ர்]சகு னம்பௌவம் வையகமே. 24

428. வையாகும் புற்கூர்மை வைக்கோலும்; வள்வலி வார்கூர்மையாம்;
மெய்யாகுஞ் சொற்பொரு ளுண்மை யுடம்பொற்று; மீன் உடுமீன்;
ஐயா மழகு மிருமலும்; ஆர்தல் நிறைதலுண்டல்;
பையா மழகு மரவின் படமும் பசுமையுமே. 25

429. பணியணி யேவற் றொழில்பாம்பு; பார்கற் பரப்புநிலம்;
அணியழ காபர ணம்மலங் கார மணிவகுப்பு;
கணிகணி யான்வேங்கை; காயம்மெய் யாகாயங் கார்ப்பு; மஞ்சே
தணிமுக டேயம் புதமு முதுகுந் தருணமுமே. 26

430. தருமம் உலக வழக்கம் விதியீதல் தட்பநல்ல
கரும மியல்பு தவம்புலல் நல்லறங் கண்ணருளும்;
பிரமம்மால் மந்திரம் வேதம்வே தாந்தம் பிரமன்மதி
இரவிதீ முத்தீப் பதம்வேள்வி ஞான மிருடிகளே. 27

431. இருமை பெருமையு மிம்மை மறுமையும்; ஏண் வலியேண்;
கருமை கறுப்புப் பெருமையும்; காளங்கார் நஞ்சுகழு;
வருபவ னம்நாடு வீடுகால்; வாடை வடந்தைதெரு;
உருவடி வுட்காம்; ஒளிபுகழ் சோதி யொளிப்பிடமே. 28

432. இட்டறு சத்தி குடைவலி காளி யிசைச்செயுள்வேல்;
தொடையல்முத் தாத்தி சுடர்ப்பூண்சந்து ஆரமாம்; சோரியப்பக்
கடைமுடி வாவணம் வாயில் கடையாம்; களிசெரு[க்கு]ம்
வடிமது வு[ம்]மாம்; மலைதிசை வானது மாதிரமே. 29

433. மாவே பெருமை கருமைநாற் காலன வண்டுநிறம்
பூவே தருத்திரு மாமர வோருமார்ந் ...
... ... ... தாரணியுந்
தேவே திசையிடந் தெய்வம்; ஏறேர்தருச் சேவென்கவே. 30

**427.** 4-5 யிறைபொ யெருமை பெயா; 6 கறங்கு. **428.** 5 யார்கூர்மை யாம். **431** 5 மெணமலியெண். **432.** 12 யாவணம்; 10 சோரியப்புக்.

434. சேயே மகவு முருகனுஞ் செவ்வாயுஞ் சேய்த்துமென்க ;
ஆய்தல் நுணுக்க மசைவாய்தல் ; அஃகூர் செறிவுவளம் ;
வாயே விடமும் வருவாயும் வாய்மையும் வாக்குமென்க ;
தூய மறைமறை கேடக மந்திரந் தூய்நகையே. 31

435. நகையா மகிழ்ச்சி மலர்ச்சி [யிகழ்ச்சி] நகையெயிறும் ;
தகையா மிளைப்புப் பெருமை வனப்பென்க ; சங்கம் சபை
அகலாப் புணர்ச்சி வளைதை வளை ; அரில் தூறுகுற்றம்
இகலாகும் ; ஏற்றலே கோடலு மேன்று பொருதலுமே. 32

436. பொற்றை வரைதூறும் ; ஏன மிரவிதீப் பொற்கனலி ;
அற்றம் அவகாசஞ் சோர்வு மறைபொரு ளற்றதுண்மை ;
மற்றேன் கிளவி வினைமாற் றசைநிலை ; மாடு அயல்பொன் ;
எற்றேன் பதுநினை வென்னென்ன லேல்புடை யாதியம்பே. 33

437. ஆகம் உடல்மார்பு ; உகுத்தல் செகுத்தலும் வீழ்த்தலுமாம் ;
பாகம் பதமோ ரளவொடு பல்கூறும் பாகியுமாம் ;
நாகம் சுவற்க மரவானை காரீய நற்பொருப்போ
டேக மாமும் ; குலம் சாதி கூட்டமு மில்லமுமே. 34

438. இல் இலந் தேறு மனையாள் ; இடந்துயில் கோயில்பள்ளி ;
கோல்லி யிசையுங் கிரியும் ; கணைகணை கோல்திரட்சி ;
கல்வி யறிவும் பயிற்சியும் ; காவல் அரண்சிறையாம் ;
வல்லி கொடியும் நிகளமு மாறலொர் வல்லியுமே. 35

439. வல்லை யரணும் வலியும் விரைவும் ; வரைவரைவே
எல்லையும் ; சூதம் இரதமு மாவும் பிறப்பும்வண்டும் ;
முல்லை யிசையு மொருகொடி யுங்கற்பு முன்னிலனும் ;
நல்ல தகரந் தருப்பணஞ் சுண்ணமு நல் இடியே. 36

440. இடமே விசாலமும் வாமமு மூவகை யாமிடமும் ;
தடமே பெருமை வளைவு சுனையானைத் தண்டம்வெற்பு ;
கடமே மலைச்சாரல் மட்கல மாகங் கடாங்கடனும் ;
படமே யெழு[து] படந்துகில் பாம்பின் படமும்பன்னே. 37

441. பன்னிய நூல் இழை யெண்ணங் கொடியும் பனுவலுமாம் ;
கன்னல் கடிகை யதன்வள மிக்குக் காகங்குடம் ;
துன்னல் குறுகல் செறிதல் ; இருகதிர் சோதிவிளக்
கின்னுங் கனலுஞ் சுடர் ; ஒகை யின்பம் இழுமெனலே 38

434. 9 வன்கூர். 436. 6-7 அறறகமவாசகஞ். 438. 8 கிரீறையும்.
441. 12 குறுதல் ; 14 உருதிர்.

